தமிழ்க் கடல்

# இராய. சொக்கலிங்கம்

பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

தமிழறிஞர் வரிசை - 9

# தமிழ்க்கடல்

# இராய. சொக்கலிங்கம்

பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

திங்கள் (தொடர்) ஆய்வுக் கருத்தரங்கம் - தமிழறிஞர் வரிசை - 9
தமிழ்க்கடல் இராய. சொக்கலிங்கம் (22-12-2003)


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Tamilk Katal Raya Cokkalinkam** |
| Editors | : | Dr. S. Krishnamoorthy<br>Director<br>IITS, Taramani, Chennai - 600 113.<br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>IITS, Taramani, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No | : | 531 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 2005 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii + 104 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 30/- (Rupees Thirty Only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Chennai - 600 004. |
| Subject | : | Biographical & Critical Studies on<br>Raya. Cokkalingam |


---

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஒல்லும்வகையெல்லாம் தமிழை வளர்ப்பதில் அயராது பாடுபட்டுவருகிறது. வாரக்கருத்தரங்கு, திங்கள் கருத்தரங்கு, ஆண்டுக்கருத்தரங்கு, அறக்கட்டளைக் கருத்தரங்கு போன்ற பல்வேறு கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாக வெளியிட்டுத் தமிழுக்கு வளம் சேர்த்து வருகிறது. தமிழாய்வுக்கு உடனடித் தேவை என்ன என்பதை உணர்ந்து அதைச் செயல்படுத்திவருவதே இதற்குக்காரணமாகும்.

இந்நிறுவனம் தொடக்கக் காலத்திலிருந்து பல்வேறு பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்திவருவதைத் தமிழுலகம் நன்கு அறியும். தமிழுக்கென்று அமைந்த மரபையும் பாரம்பரியத்தையும் எடுத்துக்காட்டும் வகையில் தமிழ் இலக்கியக் கொள்கை என்ற தொடர்கருத்தரங்கை இந்நிறுவனம் நடத்திவந்தது. தமிழர் கலைச் செல்வங்கள் என்ற தலைப்பில் தொடர் கருத்தரங்காகத் தமிழ் மரபினை உணர்த்தும் வகையிலும் கருத்தரங்குகளை நடத்திவந்தது. இவையன்றியும் பல்வேறு இலக்கியப் பொருண்மைகளில் கருத்தரங்கை நடத்திவந்தபெருமை இந்நிறுவனத்திற்கு உண்டு. இந்நிறுவனம் தன் அளவிலும் பிற நிறுவனங்களோடு சேர்ந்தும் இத்தகைய கருத்தரங்குகளை நடத்தித் தமிழாய்வுக்குச் சிறப்புச் சேர்த்து வந்துள்ளது. இக்கருத்தரங்குகளைத் தொடர்ந்து தமிழறிஞர்களை மையப்படுத்திய நிலையில் தொடர்கருத்தரங்கு ஒன்றைத் தொடங்க எண்ணியது. இவ்வகையில் **'தமிழறிஞர் வரிசை'** என்ற பெயரில் தொடர் கருத்தரங்கை நடத்துவதன்மூலம் அறிஞர் பலரின் அரிய தமிழ்த் தொண்டுகளை எல்லாம் இவ்வுலகிற்கு எடுத்துக்காட்ட முடியும் என்ற நிலையில் இத்தகைய தொடர்கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது.

வரலாறு எழுதப்படாத தமிழறிஞர்களுக்கு ஒரு வரலாற்றை உருவாக்குவதன் மூலம் அத்தமிழறிஞர்களைப் பற்றிய செய்திகள் ஆவணப் படுத்தப்படும். அவ்வாறு ஆவணப்படுத்தப்படுவதால் இத்தமிழறிஞர்கள் இம்மண்ணில் பிறந்த பயனும், இம்மண்ணிற்கும், மொழிக்கும், இனத்திற்கும் ஆற்றிய அரும்பெரும் பணிகளும் பின்வருவோரால் போற்றப்படும் நிலை உருவாகும். இதனால் இத்தமிழறிஞர்

வரிசைக்கருத்தரங்கை வாழ்க்கை வரலாற்றுக் கருத்தரங்காக அமைக்காமல் ஆய்வுக்கருத்தரங்கமாக அமைத்துக்கொள்ள முடிவு எடுக்கப்பட்டது. அவ்வகையில் தமிழுக்கு உழைத்து மறைந்த அறிஞர்கள் பலநூறுபேர் நம்முன் வந்தனர். அவர்கள் அனைவரைப் பற்றியும் இத்தொடர் கருத்தரங்கம் அமையவேண்டும் என்பது எங்கள் அவா. எனவே அனைவரையும் பட்டியலிட்டுப் பகுதி பகுதியாக இத்தொடர் கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது. அதில் முதல் கட்டமாகப் பதினாறு அறிஞர்கள் தெரிவுசெய்யப்பட்டனர்.

இத்தமிழறிஞர்களின் முதல் பட்டியலைக் கொண்டு தமிழறிஞர் களைப் பற்றிய கருத்தரங்கு நடைபெறும் நாள், கட்டுரை வழங்க வேண்டிய நாள் பற்றிய குறிப்புகளுடன் முதல் அட்டவணை தயார் செய்யப்பட்டது.

இப்பதினாறு தமிழ் அறிஞர்களைப் பற்றியும் கட்டுரைகள் வழங்கத் தமிழகத்தில் உள்ள பல்வேறு கல்லூரிகள், பல்கலைக்கழகங்களில் பணி புரியும் ஆசிரியர்கள் அழைக்கப்பட்டனர்.

ஒரு திங்களுக்கு ஒரு தமிழறிஞர் என ஒருவரைப் பற்றிய கருத்தரங்கில் 5 அல்லது 6 பேர் ஆய்வு செய்யவேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் கட்டுரைகள் கோரப்பட்டன. ஒருவரைப் பற்றிப் பலர் ஆய்வுசெய்து கட்டுரை வழங்குவதால் அவ்வறிஞருடைய பன்முக ஆளுமையை வெளிக்கொணர முடியும். அத்தமிழறிஞர்களின் வாழ்க்கை வரலாறு முதலில் அமையவேண்டும். பதிப்பு, மொழிபெயர்ப்பு, திறனாய்வு போன்ற நிலைகளில் அவ்வறிஞர் பற்றிய ஆய்வுகள் தொடர்ந்து இடம்பெறவேண்டும் என்ற நோக்கில் கட்டுரைகள் பெறப்பட்டன. இக்கருத்தரங்கில் மிகுந்த விருப்பத்துடன் ஆய்வாளர்கள் கட்டுரை வழங்க முன்வந்தமை உண்மையிலேயே எங்களுக்கு வியப்பு அளித்தது. முறையாகத் திட்டமிடப்பட்டுச் செயல்படத் தொடங்கிய **இத்திங்கள் தொடர் ஆய்வுக்கருத்தரங்கு – தமிழறிஞர்வரிசை** புதுப்பொலிவுடன் எண்ணிய வண்ணம் தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. இம்முதல் பட்டியலைத் தொடர்ந்து இரண்டாவது பட்டியல்,மூன்றாவது பட்டியல் எனத் தமிழறிஞர் வரிசை ஆண்டுக் கணக்கில் நடைபெறும் தொடர் கருத்தரங்காக உருவெடுத்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய, நாளைய தலைமுறையினர்க்கும் தமிழ் உலகிற்கும் ஒரு சிறந்த ஆவணமாக அமைய இருக்கும் இத்தமிழறிஞர்வரிசைக்

கருத்தரங்கக் கட்டுரைகளைத் தொடர்ந்து நூலாக வெளியிடுவதில் இந்நிறுவனம் பெருமை கொள்கிறது. எப்போதும் ஒரு பணியைத் திட்டமிட்டு எதிர்கால நோக்கில் செயல்படுத்தினால் அத்திட்டம் வெற்றியடைவது உறுதி என்பதற்குச் சான்றாக இத்தமிழறிஞர் வரிசைத் தொடர் கருத்தரங்கு அமையலாம்.

தமிழ் அறிஞர் வரிசையின் ஒன்பதாம் கருத்தரங்காகத் தமிழ்க்கடல் இராய.சொக்கலிங்கம் அவர்களைப் பற்றிய இக்கருத்தரங்கு அமைகிறது. இக்கருத்தரங்கிற்கு அறுவர் கட்டுரை வழங்கியுள்ளனர். இக்கட்டுரைகள் இராய.சொக்கலிங்கம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும் அவர்தம் தமிழ்ச் சிந்தனையையும், காந்தியச் சிந்தனையையும் அவர்தம் காப்பிய ஆய்வுகளையும், பதிப்புப் பணியையும், உரைப் பணியையும், இதழாசிரியர் பணியையும் தமிழ் உலகிற்கு வெளிக்கொணரும் நிலையில் அமைந்துள்ளது. செட்டிநாடு தந்த செந்தமிழ்ச் செல்வர் தமிழ்க்கடல் இராய.சொக்கலிங்கம் அவர்கள் 3-10-1898ஆம் ஆண்டு பிறந்தார். இவர் தமிழ்க்கடல் என்று எல்லோராலும் பாராட்டப்பெற்ற பெருமைக்குரியவர்.

இராய.சொ. அழுத்தமான நாட்டுப்பற்று உடையவராக விடுதலை வீரராகத் திகழ்ந்தார். தனது அரசியல் குருவாகத் தமிழ்த்தென்றல் திரு.வி.க அவர்களை மனத்தில் வைத்துக் காங்கிரஸ் பேரியக்கத்தின் கொள்கைகளை நாட்டுமக்களிடையே பரப்புவதற்காகவும் மக்களிடையே விடுதலை உணர்வை ஊட்டுவதற்காகவும் ஊழியன் என்ற இதழைத் தொடங்கி நடத்தினார். இவ்விதழைச் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளையும் தேசிய உணர்வுகளையும் மக்களிடையே பரப்புவதற்கான அரிய கருவியாகப் பயன்படுத்தினார். கொல்லாமை, பொய் சொல்லாமை, தீண்டாமை ஒழிப்பு, சாதிப்பாகுபாடின்மை ஆகியவற்றைப் பெரிதும் மக்களிடையே பரப்பினார். காந்தியத்தைப் போற்றி கதர் அணியவேண்டும் என்ற கொள்கையை ஊழியன் என்ற இதழின் வழி இராய.சொ. அவர்கள் மக்களிடையே எடுத்துக்கூறினார்.

விடுதலைப் போராட்டத்தில் ஓர் ஆண்டு சிறைத்தண்டனை பெற்ற இராய.சொ. வேலூர் சிறையில் இருந்தார். அரசியல் காரணமாக முதன்முதலாகச் சிறைசென்ற நகரத்தார் என்ற பெருமை இராய.சொ. அவர்களுக்கு இருந்தது. தேசிய இயக்கத்தின் மீதும் காந்தியத்தின் மீதும் அளப்பறிய பற்று வைத்திருந்தார். காந்தியின் புகழ்பாடும் வகையில் 'காந்தியும் வள்ளுவரும்' 'காந்தி பிள்ளைத் தமிழ்' என்ற நூற்களை எழுதினார். தன்னைக் 'காந்தியக் கிறுக்கன்' என்று பிறர் நினைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் வாழ்ந்தார். தேசியவாதியாக, அரசியல்வாதியாக, காந்திய வாதியாக, ஆன்மீகவாதியாக,

நல்ல பேச்சாளராக, இலக்கியவாதியாக வாழ்ந்தார் இராய.சொ. 30.9.1974 ஆண்டு வீடுபேறு அடைந்தார்.

இத்தகைய பன்முக சிறப்புகளையெல்லாம் ஓரிழையில்கோத்து இவரது பன்முகத் திறன் வெளிப்படும் நிலையில் '**தமிழ்க்கடல் இராய.சொ.**' என்ற நூல் வெளிவருகிறது. இந்நூல் தமிழ் உலகிற்குப் பெருமை சேர்த்துத் தமிழ் இலக்கிய வரலாற்றின் கூடுதல் வரவாக அமையும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் தமிழ் ஆர்வலர்க்கும் ஆய்வாளர்க்கும் அரிய கருத்துக் கருவூலமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவிற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை
20-01-05

**இயக்குநர்**

# கட்டுரையாளர்

முனைவர் அ. அறிவுநம்பி
பேராசிரியர் & தலைவர், தமிழ்த்துறை
புதுவைப் பல்கலைக்கழகம், பாண்டிச்சேரி.

முனைவர் லொ.ஆ. உமாமஹேஸ்வரி
விரிவுரையாளர், தமிழ்த்துறை
டாக்டர் எம்.ஜி.ஆர். ஜானகி அம்மாள் மகளிர் கல்லூரி
சென்னை - 600 020.

முனைவர் சூ. நிர்மலாதேவி
ஆய்வு உதவியாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை.

செல்வி நா. புனிதப் பொற்கொடி
விரிவுரையாளர், தமிழ்த்துறை
ஈவாட் மகளிர் கிறித்துவக் கல்லூரி
மெல்ரோசாபுரம்.

முனைவர் நா. வள்ளி
இணைப்பேராசிரியர்
இராமசாமி தமிழ்க்கல்லூரி, காரைக்குடி.

திரு ப. ஸ்டாலின்
ஆய்வாளர்
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.

# உள்ளே

# வாழ்க்கை வரலாறு

நா. வள்ளி

செட்டிநாடு தந்த செந்தமிழ்ச் செல்வர்களுள் இராய. சொ. என்றும் 'தமிழ்க்கடல்' என்றும் எல்லாராலும் அன்புடன் அழைக்கப்படும் இராய. சொக்கலிங்கனாரும் ஒருவர். காரைக்குடியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில் 3-10-1898ஆம் ஆண்டு கருவிலே திருவுடையாராகத் தோன்றினார் இராய.சொ. தந்தையார் பெயர் இராயப்பச் செட்டியார்; தாயார் அழகம்மை ஆச்சி.

## இளமைக்கல்வி

அக்கால வழக்கப்படி காரைக்குடியில் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் பயின்றார். இராய.சொ.வின் தந்தையார் பாலக்காட்டில் கொடுக்கல் வாங்கல் தொழிலைச் செய்து வந்தார். அதனால் எட்டு-ஒன்பது வயது வரையில் பாலக்காட்டில் படித்த இராய. சொ. பதின்மூன்றாம் வயதில் பர்மா சென்றார். அங்குச் சில ஆண்டுகள் இருந்து பின் தாயகம் திரும்பினார். பிறகு மூன்றாண்டுகள் காரைக்குடியில் சிதம்பர ஐயரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத்தேர்ந்தார். அது அவரது வாழ்க்கையில் ஒரு பெரிய திருப்பு முனை ஆயிற்று. பின்னாளில் 'தமிழ்க்கடல்' என்று பாராட்டப்படுவதற்கான வித்து சிதம்பர ஐயரிடம் பயின்றபோதே போடப்பட்டது என்றால் அது மிகையில்லை. 1918இல் தம் இருபதாவது வயதில் உமையாள் ஆச்சியை மணந்தார்.

## விடுதலை வேள்வியில் இராய.சொ.

இராய.சொ. அழுத்தமான நாட்டுப்பற்றாளர். அவர் காலம் நாட்டு விடுதலை உணர்வு கொழுந்து விட்டு எரிந்த காலம். காரைக்குடியில் தேசபக்தர் சுப்பிரமணிய சிவா தேசிய உணர்வை வளர்த்த போது அவருக்கு ஆதரவாக இருந்த நகரத்தார்கள் பலரும் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டனர். செட்டிநாட்டு இராஜாராம்மோகன்ராய் என்றழைக்கப்பட்ட சீர்திருத்தச் செம்மல் சொ.முருகப்பா, கம்பன் அடிப்பொடி சா. கணேசனார், வ.வே.சு. ஐயர், சுப்பிரமணிய சிவா, வ.உ.சி. போன்ற பெருமக்களின் தொடர்பால்,

இராய.சொ.வும் எழுச்சிமிக்க விடுதலை வீரராகத் திகழ்ந்தார். தமிழ்த்தென்றல் திரு.வி.க.வை அரசியல் குருவாகக் கொண்டார்.

இந்திய தேசிய காங்கிரஸ் கட்சி நாட்டு விடுதலைக்குப் பாடுபடுவதைக் கண்டு நகரத்தார் பலர் விருப்பமுடன் காங்கிரசில் சேர்ந்து நாட்டிற்காகப் பணியாற்றினர். இராய.சொ.வும் 1925இல் காங்கிரஸ் மகாசபையில் சேர்ந்து தொண்டு செய்யலானார். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் உறுப்பினராகவும், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் உறுப்பினராகவும் காரைக்குடி மாவட்ட காங்கிரஸ் கமிட்டித் தலைவராகவும் இருந்திருக்கிறார்.

கட்சியின் கொள்கைகளைப் பரப்புவதற்காகவே 'ஊழியன்' என்ற ஓர் இதழை இருபதாண்டுக் காலம் நடத்தினார். ஊழியன், குமரன், தனவணிகன், செட்டிநாடு, வீரகேசரி, சக்தி போன்ற நகரத்தார் இதழ்கள் போட்டி போட்டுக் கொண்டு தேசிய உணர்வையும் சமூகச் சீர்த்திருத்தக் கருத்துகளையும் மக்களிடையே பரப்பின. நல்லவை வாழவும் அல்லவை வீழவும், தேசிய முழக்கம் செய்யவும் இத்தகைய இதழ்களைக் கருவிகளாகப் பயன்படுத்திக் கொண்டனர் நகரத்தார். ஊழியனின் தொண்டு அன்றைய இதழியல் உலகில் பரபரப்பாகப் பேசப்பட்டது. 'ஊழியன்' இதழின் நோக்கம் என்ன என்பதை ஒவ்வோர் இதழின் தொடக்கத்திலும் இடம் பெற்றுள்ள,

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடி லாது
சொந்தவர சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்தநிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
நந்தலிலா ஊழியமே நான்கொண்டேன்
நல்லனவெந் நாளும் வாழ்க

என்ற பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.

இந்திய நாட்டின் விடுதலையில் காந்தியடிகள் காட்டிய நெறியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட நகரத்தார் காந்தியக் கொள்கைகளான கொல்லாமை, பொய்யாமை, தீண்டாமை ஒழிப்பு, சாதிப்பாகுபாடின்மை, கதரியக்கம் ஆகியவற்றையும் போற்றினர். இராய. சொ.வின் ஊழியன் இதழ், சுதந்திரமே உயிர், தீண்டாமை ஒழிக, காந்தியைப் போற்றிக் கதரை அணியுங்கள் என்று காந்தியக் கொள்கைகளை முழக்கங்களாக மக்களிடையே பரப்பியது.

ஆங்கிலேயருக்கு எதிராகக் காந்தியடிகள் தொடங்கிய தனிநபர் சத்தியாக்கிரகம், ஒத்துழையாமை இயக்கம், வெள்ளையனே வெளியேறு என்ற ஆகஸ்ட் புரட்சி ஆகிய அனைத்திலும் நகரத்தார் கலந்து கொண்டனர். காரைக்குடி தேவக்கோட்டைப் பகுதிகளில் தேசிய இயக்கம் வலிமையோடு வளர்ந்தது. 1920இல் காந்தியடிகள் செட்டிநாட்டுக்கு வந்தபோது அவரது வருகையால் விடுதலை இயக்கத்தில் தீவிரப்போக்கு ஏற்பட்டது.

காந்தியடிகள் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தில், செட்டிநாட்டில் இராய.சொ., சா. கணேசன் முதலியோர் தீவிரப் பங்கு கொண்டனர். சட்ட மறுப்பு இயக்கத்தில் சேர்ந்து 1932இல் இராய.சொ. ஓராண்டுச் சிறைத் தண்டனை பெற்று வேலூர்ச் சிறையிலிருந்தார். நகரத்தாரில் அரசியல் காரணமாக முதன் முதலாகச் சிறை சென்றவர் இராய.சொ.

## காந்தியடிகளும் இராய.சொ.வும்

இராய.சொ. தீவிரமான காந்தியவாதி. தம்மை 'காந்திக் கிறுக்கர்' என்று அழைத்துக் கொள்வதில் பெருமைப் பட்டவர். காந்தியடிகளின் கொள்கைகளைத் தம் வாழ்வில் கடைப்பிடித்த இராய.சொ. தம் கவிதைகளுக்குப் பாடற்பொருளாகக் காந்தியைக் கொண்டார். சிறையிலிருந்த காலத்தில் காந்தியடிகளைப் பற்றிய பல இலக்கியங்களைப் படைத்தார். காந்தி பிள்ளைத் தமிழ், காந்தி இருபா (காந்தி கலித்துறை அந்தாதி, காந்தி நான்மணி மாலை) காந்தி கவிதை எனத் தமிழ்க்கடல் மகாத்மாவிற்குச் சூட்டிய பாமாலைகள் பல. திருக்குறளின் விளக்கமே காந்தியடிகளின் வாழ்க்கை என்பதை, 'காந்தியும் வள்ளுவரும்' என்ற நூலில் 125 செய்யுட்களில் கூறியுள்ளார். காந்தி இருபா முன்னுரையில் இராய.சொ., 'இவன் காந்திக் கிறுக்கன் என்று நினைப்போர் நினைக்க. இந்த உலகத்தில் பாமாலை சூட்டத் தகுதியுள்ளோர் ஒருவராவது உண்டு என்றால் அவர் காந்தியடிகளே என்பது என் கருத்து' என்று எழுதியிருப்பது, அவருக்குக் காந்தியின் பால் இருந்த பற்றைக் காட்டுகிறது.

1934ஆம் ஆண்டு தென்னிந்தியச் சுற்றுப் பயணத்தின்போது, மகாத்மா காந்தியடிகள் மனமுவந்து இராய. சொ.வின் வீட்டிற்கு வந்து பெருமைப்படுத்தினார். பெறற்கரிய பேறு பெற்று மகிழ்ந்த இராய.சொ., 'என்ன மாதவம் செய்தது இக்குடில்' என்ற வாசகத்தைத் தம் இல்லத்தின் முன் வரவேற்பு வாசகமாக எழுதி வைத்தார். மேலும், 'நாமார்க்கும் குடியல்லோம்' என்ற நூலில் இது பற்றி, "அறவாழி அந்தணர், கருணைக்கடல், உண்மையே உருவெடுத்தவர்,

எவ்வுயிர்க்கும் தீங்கு நினையாதவர்; உலகனைத்தும் ஓர் உயிரென உணர்ந்த ஞானி, பொறியடக்கி ஆண்ட பெருந்தகை காந்தியடிகளை விருந்தினராய்ப் பெறும் பேறு பெற்றேன். என் உள்ளக்கமலத்தே இடம்பெற்ற அத்திருப்பாதத் துளி என் சிறு குடிலையும் புனிதமாக்கியது.

எம்மை ஆளுடைய நாயகன்
விருந்தினுக்கு இசைந்தான்

என்று கண்ணபிரானை விருந்தினராகப் பெற்ற விதுரனின் கரைபுரண்டோடிய மகிழ்ச்சிப் பெருக்கினை ஒப்ப என் உள்ளம் இன்பக் கடலாடியது. இன்னோரன்ன நிகழ்ச்சிகள் இறவாதவை காலாவதி இல்லாதவை" எனக் குறிப்பிடுகிறார். இந்த அளவிற்குக் காந்தியின் பாலும், காந்தியக் கொள்கைகளின் பாலும் ஈர்க்கப்பட்ட இராய.சொ. காந்தியக் கொள்கை நாடெங்கும் மணம் வீசிப் பொலிய வேண்டும் என்று விரும்பினார்.

வாய்த்த பெருங்காந்தி மன்னும் அறம் உலகில்
பூத்து மணம் வீசிப் பொலியும் நாள் எந்நாளோ

என்ற ஏக்கத்தை அவரது பாடலில் காணலாம் (புதுமைப் பாக்கள்- எந்நாட் கண்ணி).

## சமூகச் சீர்திருத்தமும் இராய. சொ.வும்

இராய.சொ.வுடன் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், மு. சின்னையா செட்டியார், வை.சு. சண்முகஞ் செட்டியார், பிச்சப்பா சுப்பிரமணியன், சொ. முருகப்பா போன்றோர் சமூகச் சீர்திருத்தத்திற்காகக் குரல் கொடுத்தனர். தீண்டாமை, பெண்ணடிமை ஆகியவற்றை ஒழிக்கப் பாடுபட்டனர். கொல்லாமையை வலியுறுத்தினர். இராய. சொ.வின் ஊழியன், 'எல்லோரும் ஒரு குலம்' 'தீண்டாமை ஒழிக', 'விதவையின் கண்ணீரைத் துடை' என்று முழங்கியது.

சாதியால் தீண்டாதார் என்னவொரு சாராரை
வாதிக்கும் மெய்யறியார் மதிபெறுநாள் எந்நாளோ

ஆணுயர்வு பெண் இழிவு என்றறையும் அறியாமைக்
கோணல் மனிதர் உயர் குணம் பெறுநாள் எந்நாளோ

சின்னஞ்சிறு வயதில் திருமணங்கள் செய்து இல்லின்
மன்னும் அறங்கெடுக்கும் மாவொழிநாள் எந்நாளோ

என்று எந்நாட் கண்ணியில் ஏங்கிய இராய.சொ. அந்நிலை மாறவேண்டும் என்ற விருப்போடு, 'பேரிகை' என்ற பாடலில்,

உயர்வு தாழ்வு பிறப்பில் இல்லை என்று கொட்டு பேரிகை
பெண்ணும் ஆணும் ஒக்குமறிவில் என்று கொட்டு பேரிகை

என்று முழங்குவார்.

## இந்துமதாபிமான சங்கமும் இராய.சொ.வும்

சொ. முருகப்பா, இராய.சொ., காந்தி மெய்யப்பர் போன்றோர் அக்கால இளைஞர்களை நல்வழிப்படுத்துதற்காகக் காரைக்குடியில் 1917இல் இந்து மதாபிமான சங்கம் என்ற ஓர் அமைப்பைத் தோற்றுவித்தனர். இந்து சமயத்தைப் பரப்புவதுதான் சங்கத்தின் குறிக்கோள். அதே சமயம் நாட்டிற்கும் மொழிக்கும் அச்சங்கம் பெரிதும் உழைத்திருக்கிறது.

மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்கு ஆலவாய் அவிர்சடைக் கடவுளாகிய சொக்கலிங்கப் பெருமான் தலைவராக இருந்ததைப் போல இராய. சொக்கலிங்கனார் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்திற்குத் தலைவராக வீற்றிருந்து சங்கத்தின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்டார். நேர்மை, ஒழுங்கு, நேரந்தவறாமை, ஆகியவற்றின் மறுவடிவம் இராய.சொ. இந்து மதாபிமான சங்க நிர்வாகச் சபை கூட்டத்தில் இவரது கண்டிப்பைக் காணலாம். இராய.சொ. உமையாள் மண்டபம் என்ற பெயரால் சங்கக் கட்டிடத்தில் மேல்மாடி ஒன்று கட்டிக் கொடுத்தார். 1919ஆம் ஆண்டு பாரதியார் இச்சங்கத்திற்கு வருகை புரிந்து சிலநாட்கள் தங்கியிருந்து இச்சங்கத்தின் சேவைகளைப் பாராட்டி ஏழு பாடல்கள் பாடியுள்ளார்.

குலம் உயர நகர்உயர நாடுயர
உழைக்கின்றார் கோடி மேன்மை
நிலவுற இச்சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தொளிர்க நிலத்தின் மீதே

என்று பாரதியாரால் வாயார வாழ்த்தப்பெற்றது இச்சங்கம். இச்சங்கத்திற்குப் பாரதியார் வந்திருந்தபோது இராய. சொ., சொ. முருகப்பா போன்றோர் பாரதியாருடன் நிழற்படம் எடுத்துக்கொண்டனர். இச்சங்கத்தின் மூலம் தான் பாரதியாரின் நிழற்படம் உலகிற்குக் கிடைத்தது.

## நகரசபைத் தலைமையும் தொண்டும்

1938 முதல் 1941 வரை காரைக்குடி நகரசபைத் தலைவராகப் பணியாற்றினார் இராய.சொ. இவர் தலைமைப் பொறுப்பேற்ற காலத்தில் நான்கே நான்கு தொடக்கப்பள்ளிகள் காரைக்குடியில் இருந்தன. அவர் பதவியில் இருந்த காலத்தில் 17 ஆரம்பப்பள்ளிகள் தோன்றின. தெரு விளக்குப் போடும் திட்டத்தின் கீழ் நீலரச விளக்குகள் ஒளி வீசின. நகரசபைக்கென ஓர் அலுவலகம் 'காந்தி மாளிகை' என்ற பெயரில் கட்டப்பட்டது. இராய.சொ. தலைவராக வந்த முதல் ஆண்டில் நகரசபை ஊழியர்களுக்குக் கதராடை வழங்க ஏற்பாடு செய்தார்.

## இராய.சொ.வின் இலக்கியப் பணியும் ஆன்மீகப் பணியும்

சைவத்தையும் தமிழையும் இரு கண்களாகப் போற்றியோர் நகரத்தார். இராய.சொ.வும் இதற்கு விதி விலக்கல்லர்.

சிறை வாழ்க்கைக்குப் பிறகு படிப்படியே அரசியல் பொதுவாழ்விலிருந்து விலகிய இராய.சொ. தெய்வத் தமிழ்த் தொண்டராக உயர்ந்தார். 'தாலாட்டும் கும்மியும்' என்ற நூலின் முன்னுரையில், "செந்தமிழ் அன்னைக்கு அணிகலன் நல்கலில் பெரு விருப்புடைய சிறியேனுக்கு அப்பணியைக் கொஞ்சம் அமைதியோடு ஆற்றுதற்குப் பேருதவி புரிந்தது சிறை வாழ்வு. சிறையில் யான் பெற்ற நலன் பலவற்றுள் சிறப்பானது என் இனிய தமிழ்த்தாய்க்கு அணிந்த பாமாலை நலனே" என்று தமிழன்னைக்குத் தொண்டு செய்ய வாய்ப்பளித்த சிறை வாழ்வை நன்றியோடு நினைவு கூர்கிறார்.

இராய.சொ. ஒரு பெருங்கவிஞர். காந்தியைப் பற்றிச் சிறையிலிருந்த போது பாடிய, காந்தி பிள்ளைத் தமிழ், காந்தி கலித்துறை அந்தாதி, காந்தி நான்மணி மாலை, காந்தி பதினெண்பா ஆகிய இலக்கியங்கள் குறிப்பிடத்தக்கவை. விருத்தம், வெண்பா, கலிப்பா, கலிவிருத்தம், வஞ்சித்தாழிசை, வஞ்சி விருத்தம், அகவற்பா, ஆசிரியத்தாழிசை, தாண்டகம், சிந்து, கண்ணி ஆகிய பா வகைகளைத் தம் பாடல்களில் அமைத்துப் பாடியுள்ளார் இராய.சொ.

பாரதத்தாய் அருமந்த பாலன் கண்டாய்
பண்டை வாழ்வு அவள் பெறற்குப் பகரொணாத
ஆரஞரே இன்பமென அடைந்தான் கண்டாய்
அவனியெல்லாம் நனிவாழ அருள்வான் கண்டாய்
பேரறிவு படைத்ததனிப் பெரியோன் கண்டாய்
பிறர்க்கெனவே வாழும்பெருந் தகையோன் கண்டாய்
ஏருழவே என்தொழிலென் றிசைப்பான் கண்டாய்
ஏர் வாடாக் கோவிலுறை எம்மான் தானே

என்று, தாண்டக வேந்தராகிய அப்பரின் திருத்தாண்டகப் பதிகங்கள் ஏற்படுத்திய தாக்கத்தால் காந்தியடிகள் மீது திருத்தாண்டகம் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

'காதற்பாட்டு' என்ற கவிதை நூலையும், 'குற்றால வளம்' (கட்டுரைத்தொகுப்பு) என்ற நூலையும் இயற்றியுள்ளார் இராய.சொ. ஊழியன் இதழிலும் அவருடைய தரமான இலக்கியப் படைப்புகள் வெளிவந்தன. புகழ்பெற்ற எழுத்தாளர்களான வ.ரா., தி.ஜ.ர., புதுமைப்பித்தன், கொத்தமங்கலம் சுப்பு போன்றோர் ஊழியனால் உருவாக்கப்பெற்றவர்களாவர். எப்போதும் தமிழன்பர்கள் சூழ இருக்கும் இராய.சொ. சைவ வைணவ பேதம் பாராட்டாதவர். தமிழகத்திலுள்ள பாடல் பெற்ற தலங்களுக்கும், மங்களாசாசனம் செய்யப் பெற்ற தலங்களுக்கும் சென்று வந்த இராய.சொ. தம் அனுபவங்களைத் 'திருத்தலப்பயணம்' என்ற நூலாகத் தந்துள்ளார்.

காரைக்குடி நகரச்சிவாலயத்திலும், காரைக்குடி நா. புதூரிலுள்ள சிவா விஷ்ணு கோயிலிலும் அறங்காவலராகப் பொறுப்பேற்றுத் தெய்வப் பணியாற்றியபோது தெய்வத் தமிழ்ப் பாடல்களைச் சந்நிதிகளிலும், சுற்றுப்புறச் சுவர்களிலும் எழுதச் செய்தார்.

இராய. சொ.விடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் வள்ளல் அழகப்பர். அவர் விருப்பப்படி அழகப்பா கல்லூரியில் 'தமிழ் ஆராய்ச்சித்துறை' தொடங்கப் பெற்றது. அதன் இயக்குநராக இராய.சொ. நியமிக்கப் பெற்றார். அப்போது உருவானவைதான் 'கம்பனும் சிவனும்', 'வில்லியும் சிவனும்' என்ற ஆராய்ச்சி நூல்கள். இராய.சொ. நல்ல நினைவாற்றல் உடையவர். கற்றது மறவாதவர். அதனால் தக்க மேற்கோள்கள் அவரது உரையில் வந்து விழும். 'கம்பனும் சிவனும்' என்ற நூலில் இராவணன் வதைப் படலத்தில், விபீடணன் கூற்றாக இடம்பெறும் 'பேரன் நாடு உற்றாயோ' என்ற வரிக்குப் பொருள் கூற வந்த இராய.சொ., 'பேரன்' என்பதற்குப் பாட்டன் என்று பொருள் கூறி, இதே பொருளில் 'பேரன்' என்ற சொல் 'உங்கள் பேரனார் தம் தேசுடை எழுத்தேயாகில்' என்றுபெரிய புராணத்தில் இடம்பெறுவதையும் எடுத்துக் காட்டுவர். சந்தி பிரித்து, எளிமையாக யாவரும் புரிந்து கொள்ளும்படி ஆராய்ச்சி முன்னுரையுடன் பல இலக்கியங்களைப் பதிப்பித்துள்ளார். விறலி விடு தூது, திருவாசகத்தேன், பாவைப்பாட்டு முதலிய நூல்களை உரையோடு பதிப்பித்துள்ளார். தேவாரப் பாடல்களைச் சிறந்த முறையில் கையடக்கப் பதிப்பாகவும் வெளியிட்டுள்ளார்.

செட்டிநாட்டுப் பகுதிகளில் செல்வர்கள் வீட்டில் நடைபெறும் திருமணம், மணிவிழா நிகழ்ச்சிகளின் போது நூல்களை அன்பளிப்பாக வழங்கும் மரபு உண்டு. இராய.சொ. அந்தந்த நிகழ்ச்சிகளுக்கு ஏற்பப் பொருத்தமான நூல்களைத் தொகுத்துத் தக்க குறிப்புரைகளுடன் அச்சிட்டுத் தரும் பொறுப்பை மேற்கொண்டார். 'பாவைப்பாட்டு', 'ஆழ்வார் அமுது', 'சீதை திருமணம்', 'மாதவன் மாலை' போன்ற நூல்கள் அவ்வாறு வெளிவந்தவைதான்.

இராய.சொ. சிறந்த பேச்சாளர். கேட்பார் பிணிக்கும் தகையவாய்ப் பேசக்கூடிய ஆற்றலுடையவர். கணீரென்னும் குரலுக்குச் சொந்தக்காரர். இவர்தம் இலக்கியப் பொழிவு தனித்தன்மை உடையது. பல்லாயிரக்கணக்கான தமிழ் இலக்கியப் பாடல்கள் இவருக்கு மனப்பாடம். பாடல்களை நன்கு சுவைத்து நயங்கூறுவதில் வல்லவர். இவர் தம் துணைவியார் இறந்த பிறகு இந்துமதாபிமான சங்கத்தின் மாடியில் உமையாள் மண்டபத்திலேயே தங்கிய இராய.சொ. அன்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்கச் சங்கத்தில் சனிக்கிழமை தோறும் மாலைவேளைகளில் வில்லிபாரதத்தைச் சொல்லி வந்தார். இந்நிகழ்ச்சி இரண்டாண்டுகள் தொடர்ந்து நடைபெற்றது.

1958ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31ஆம் தேதி காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்தார் இராய.சொ. அவர்களின் மணிவிழாவைச் சிறப்பாகக் கொண்டாடினர். அவ்வமயம் இராய.சொ.வின் ஆழ்ந்தகன்ற தமிழறிவையும், தொண்டினையும் பாராட்டும் முகத்தான் அவருக்குத் 'தமிழ்க்கடல்' என்ற பட்டம் சூட்டி மகிழ்ந்தனர்.

கம்பன் கழகத் தலைவராக இருந்திருக்கிறார். அமராவதிபுதூரில் சொ. முருகப்பா அவர்கள் கம்பராமாயண ஆராய்ச்சி ஒன்று நடத்தினார்கள். தமிழ்க்கடல்தான் தலைமை. ந. சுப்புரெட்டியார், க. தேசிகன், பூ. அமிர்தலிங்கம் பிள்ளை ஆகியோர் கலந்து கொண்டனர். சனி ஞாயிறு விடுமுறை நாட்களில் இந்த ஆய்வுக் கூட்டம் நடைபெறும். இதன் முக்கியப்பணி ஒவ்வொரு பாடலாகப் படித்துச் செருகு கவிகள் எனக் கருதப் பெறும் பாடல்களை நீக்குவதுதான். குழு பாடல்களைச் சோதிக்கும், ஆராயும். இராய.சொ. முடிவு சொன்னவுடன் பாடல் நீக்கப்படும் அல்லது வைத்துக் கொள்ளப்படும் என்று அதில் கலந்து கொண்ட ந. சுப்புரெட்டியார் தன் நூலொன்றில் இதனைக் குறிப்பிடுகிறார். கம்பனைத் தனித்து இனம் காணும் அளவிற்குக் கம்பராமாயணத்தில் ஆழங்கால் பட்டவராக விளங்கியிருக்கிறார் இராய.சொ.

இராய. சொ. திருவாசகத்தைத் தம் பூசையறையில் வைத்து முப்போதும் வழிபட்டார். உத்தரகோச மங்கையில் கூத்தப் பெருமானுக்கு உகந்த மார்கழித் திருவாதிரையன்று இராய.சொ.விற்குத் திருவைந்தெழுத்தை ஓதிச் சிவதீட்சை செய்து வைத்தார் ஈசானிய சிவாச்சாரியார். அவரை 'ஞானத்தந்தை' என்று இராய.சொ. குறிப்பிடுவார். வட மாநிலங்களிலும் பர்மா, சிங்கப்பூர் போன்ற அயல்நாடுகளிலும் இவரது சைவப்பணியும் தமிழ்ப்பணியும் தொடர்ந்தன. 1961இல் பர்மா சென்றிருந்த போது இரங்கூன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் தர்ம பரிபாலன சபையார் இராய. சொ.விற்குச் 'சிவமணி' என்ற பட்டம் சூட்டினார்கள். 1963இல் கோலாலம்பூரில் அருள்நெறித் திருக்கூட்டத்தார் இராய.சொ.வின் சைவசமய ஈடுபாட்டையும் தொண்டையும் சிறப்பிக்கும் வகையில் 'சிவம் பெருக்கும் சீலர்' என்று பட்டமளித்துப் பேருவகை கொண்டனர்.

வள்ளல் அழகப்பரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்ட இராய.சொ., தம் வாழ்நாள் முழுதும் சேகரித்துத் தொகுத்த அரிய பெரிய நூல்களை, அழகப்பா கல்லூரிக்கு நன்கொடையாகக் கொடுத்து மகிழ்ந்தார். அந்நிகழ்ச்சி அழகப்பா கல்வி அறநிலையத்தாரால் ஒரு விழாவாக நடத்தப்பட்டது. அதில் கலந்து கொண்ட சி.சுப்பிரமணியம், இராய.சொ. ஒரு நடமாடும் நூலகம். ஆகவே அவர் நன்கொடை அளித்துள்ள அத்தனை நூல்களும் அவரிடம் குடி கொண்டவை. எனவே இந்நூலகம் அவருக்குத் தேவையில்லையல்லவா' என்று பாராட்டியுள்ளார்.

தேசியவாதியாக, அரசியல் வாதியாக, காந்தியவாதியாக, ஆன்மீகவாதியாக, பேச்சாளராக, இலக்கிய வாதியாக, பதிப்பாசிரியராக, தொகுப்பாசிரியராக விளங்கிய இராய.சொ. 30-9-1974 அன்று வீடுபேறு அடைந்தார். இவர் மறைந்தபோது, சொ. தேவராஜன் என்ற புலவர் பின்வருமாறு பாடுகிறார்.

*பாலும் கசந்ததெனப் பாற்கடலை விட்டுநெடு*
*மாலும் தமிழ்க்கடலை வரவழைத்துக்கொண்டானோ?*
*சீலமிகு சிவமணியின் செந்தமிழ் கேட்டின்புறவே*
*ஆலம்உண்ட கண்டன் அருகழைத்துக் கொண்டானோ?*

சைவமும் தமிழும் உள்ளவரை இராய.சொவின் பெயரும் புகழும் நிலைத்துநிற்கும்.

## துணை நூல்கள்

இராய.சொ. நினைவுமலர், இந்துமதாபிமான சங்கம், காரைக்குடி, 1984.

இராய.சொ.வின் நூல்கள்.

காந்தியடிகளுக்கு விருந்தளித்த தமிழ்க்கடல், ந. மீனவன், கட்டுரை தினமணி.

நினைவுக் குமிழிகள், 3ஆம் பகுதி, ந. சுப்புரெட்டியார், பாரிநிலையம், 1989.

பொன்விழாமலர் - இந்துமதாபிமான சங்கம், காரைக்குடி, 9-9-67.

மலரும் நினைவுகள், ந. சுப்புரெட்டியார், தேன்மழை வெளியீடு, 1989.

# தமிழ்ச்சிந்தனை

அ. அறிவுநம்பி

காரைக்குடி என்ற ஊர்ப்பெயரை மொழிந்ததும் நினைவில் உலா வருபவர்களாகச் சான்றோர் சிலரைக் குறிப்பிடலாம். அவருள்ளும் 'தமிழ்க்கடல்' என்ற விருதுக்குரியராகத் திகழ்ந்த இராய.சொக்கலிங்கனார் குறிக்கத்தக்கவர். சிவமணி, சிவம்பெருக்கும் சீலர் போன்ற சிறப்பு அடைகளும் அவரின் திருப்பெயருக்கு முன்பு பொலிவுற அமைக்கப்பெறும். இந்திய நாட்டு விடுதலைக்குப் பாடுபட்டவர்; சிறையில் வாடியவர்; 'ஊழியன்' போன்ற இதழ்களோடு தொடர்புடையவர்; காந்தியண்ணலுக்கு விருந்தளித்தவர்; ஆய்வுக் கட்டுரைகளை எழுதியவர்; திருத்தலப் பயணத்தை மேற்கொண்டவர்; பாரதி போற்றிய இந்து மதாபிமான சங்கத்துடன் உறவுடையவர்; அழகப்பர் கல்லூரியில் தமிழ் ஆராய்ச்சித் துறையில் பங்காற்றியவர்; நூல்கள் பலவற்றைப் பதிப்பித்தவர்; உரை வழங்கியவர் என்று பல்வேறு சிறப்புகளைப் பெற்றிருந்த இராய.சொ.வின் தமிழ்ச் சிந்தனையை எடுத்து மொழிய இவ்வெழுத்துரை முனைகிறது. படைப்பாளராகவும், திறனாய் வாளராகவும், பேச்சாளராகவும் விளங்கிய அவர்தம் தமிழ்ச் சிந்தனைகள் பற்பல.

## இராய.சொ.வும் தமிழும்

'தமிழ்க்கடல்' என்ற சிறப்பைப் பெற்ற இராய.சொக்கலிங்க னாரின் தமிழ்த் திருவுள்ளத்தை உணருவது தகுவது. அவருடைய வாக்குமூலமாகச் சில:

அ. காந்திக் கவிதை நூலின் சப்பாணிப்பருவ முதற்பத்தி வரிகளாக............

இனிப்பிறவி எடுக்கும்போது.........
இரும்புவியில் இனிமைசெறி என்னருமைத் தமிழ்நாட்டில்
எளியேன் பிறத்தல் வேண்டும்

என வருதல் குறிக்கத்தக்கது.

ஆ. காந்தி பிள்ளைத்தமிழ்ப் பாயிரத்தில்

பாருள்ள மொழியில்எலாம் சிறந்தமொழி
என்று, மொழி பலவும் கண்ட
சீர்உள்ள பெரும்புலவோர் செப்பிய,தீந்
தமிழ்மொழித் தேர் திருநாடு உற்ற
நாருள்ள மக்கள்எலாம் நல்தவத்தோன்
புகழ் தமிழில் நயந்து பாட,
ஏர்உள்ள இனியதமிழ் எம்பெருமான்
புகழ்தாங்கி இன்னும் ஓங்க

எனவரும் சொல்லாடல்கள் கருதத்தக்கவை.

இ. மொழிக்கு அவர்தரும் அடைமொழிகள் எண்ணத்தக்கன.

அதேநூல். செங்கீரைப் பருவம். பாடலடிகள்......

வானவர் மண்ணவர் மற்றவரும் தொழ
வான்செயல் பலசெய்த
வண்தமிழ் கன்னிவளர்த்த செழுந்தமிழ்
வரம்பமை தித்திக்கும்
தேன்சொரி தெய்வத் தீம்தமிழ் மொழியில்

ஈ. தன்னைத் தமிழன் எனக்கூறிக் கொண்டு நெஞ்சுயர்த்தும் அவரின் திறத்திற்கு ஒரு பதச்சோறு காணலாம். அவர் படைத்த காந்தியந்தாதியின் முதற் பாடல். தன்னையறிமுகம் செய்து கொள்ளும் 'சிவமணி'யின் கூற்று:

தண்ணளிசேர் காந்தி பாதம்
தலைக்கொளும்நல் காரைநகர் ராயசொக்க
லிங்கன்; அருந்தமிழன்; மாதோ

உ. 'திருத்தலப்பயணம்' எனும் பெயரிலான நூலில் இடம்பெறும் திருப்பதிகளின் பெயர்கள் பழைய தமிழ் மரபை மறுதலித்துப் புதுக்கோலம் பூண்ட ஊர்ப்பெயர்களாயிருப்பின் தலைப்பில் தூயதமிழ்ப் பெயர்களை மட்டுமே. தமிழ்க்கடலின் எழுதுகோல் தீட்டியுள்ளது. புகழ்பெற்றிருப்பினும், பரவலாக உச்சரிக்கப் பெற்றிருப்பினும் பிறமொழிக் கலப்புடன் கூடிய பெயர்களை அடைப்புக் குறிக்குள்ளே மட்டும் காணலாம். சான்றுக்குச் சில:

திருவானைக்கா - (ஜம்புகேசுரம்)

திருமயிலாடுதுறை - (மாயூரம்)

திருநல்லூர்ப்பெருமணம் - (ஆச்சாபுரம்)

திருநெல்வாயில் - (சிவபுரி).

இவைபோன்ற பகுதிகள் இராய.சொ.வின் திருவுள்ளம் தமிழ் மயமானது என்பதைப் புலப்படுத்தும். காந்தியடிகளைக் காக்கவரும் பரன் 'தமிழாகி' நிற்பவன் என்றெழுதுவார் அவர். தாம் வணங்கும் இறைவனையே தமிழ் வடிவிற் காணும் அவர்தம் பெற்றிமையை என் சொல்ல?

தமிழ்க்கடலின் தமிழ்ச்சிந்தனையை (வசதி கருதி) மூன்றாகப் பிரித்துக் கொள்ளலாம். 1. அவரின் மொழிப்பற்றும், மொழி பற்றிய மனப்பாங்கும் 2. அவருடைய தமிழிலக்கிய ஆளுமை 3. தமிழ்ப் பண்பாட்டை வற்புறுத்தும் மனநிலை.

## மொழிச்சிந்தனை

1. 'ஆழ்வார் அமுது' எனுந்தலைப்பில் அவர் சமைத்த நூல் அவரின் உரைத்திறனை மெய்ப்பிக்கும் நூலாகும். அவர் எடுத்தாண்ட பாசுரங்கள் பலவற்றில் (பக். ௬, ௭௭, ௬௨) அரங்கம் என்ற சொல் பயின்று வருகிறது. உரை வரையும் சிவமணி, ஸ்ரீரங்கம் எனப் புழக்கத்திலுள்ள சொல்லைக் கையாண்டதில்லை. திருவரங்கம் என்றே எழுதிடக் காணலாம்.

2. 'கம்பனும் சிவனும்' என்பது இராய.சொ. செதுக்கிய மற்றொரு நூலின் பெயர். பாடல்கட்குத் தலைப்பிடுங்கால் தமிழை முதன்மைப்படுத்துவார் அவர். பாடலில் பல சொற்கள் வரினும் 'சுடர்க்கடவுள் தந்த தமிழ்' என்ற சொற்களைத் தலைப்பாக்குவார் தமிழ்க்கடல் (ப. 41-42). "அகத்தியன் தவ ஒழுக்கத்தாலும் தமிழ் தந்தமையாலும் சிவனுக்கு நிகராகச் சிறப்பிக்கப் பெறுகின்றான்" என்பது அவரின் உரை (ப. 41). இச்செய்தி பாட்டினில் இல்லை. அவருடைய மனத்தில் இருந்தது.

3. அதனையொப்பவே 'மீனாட்சி திருமணம்' எனப்பெயரிய பரஞ்சோதியாரின் நூலிலும், 'தமிழ் மாந்தும் ஆடலான்' 'தமிழ் மகள் அரங்கு' 'கண்ணுதல் ஆய்ந்த பசுந்தமிழ்' எனத் தலைப்பிடுவார் விளக்கம் எழுதும் 'தமிழ்க்கடல்'. (பக். 20, 21).

4. திருத்தலப் பயண நூலின்கண் அவரின் குறிப்புரைகள் இடம்பெறுகின்றன. "இஃது என்று" எனத் தமிழ்மொழி இலக்கணம் சிதையா வண்ணம் குறிப்பெழுதும் சிவமணி (ப. 203), ராஜகோபுரம் என்றோ இராஜகோபுரமென்றோ எழுதாமல் தம் குறிப்பில்

'இராசகோபுரம்' என எழுதுவது உற்று நோக்கற்பாலது. அவரின் தமிழிலக்கணப் புலமை இங்கே வெளிப்படுகிறது எனக் கொள்வதைவிட அவரின் மொழித் தூய்மையே இலங்குகிறது எனக் கருதவேண்டும்.

5. **காந்திஅந்தாதி** என்ற தம் படைப்பில் "என்தன் இனிய இருந்தமிழ்ப் பாண்டிதனில்" (பாடல் 10) என இராய.சொ. வரைவதும் "திருவளரும் தான்நேர் தமிழ்நேர்" (பாடல் 14) எனத் தமிழுக்கு இணை தமிழே என விளக்குவதும் அவர் நெஞ்சத்துறை மொழிப்பற்றை எடுத்துரைக்கும். அதனைப் போல '**வில்லியும் சிவனும்**' என்ற தன் ஆய்வு நூலில் வில்லியின் பாட்டிற்குத் தலைப்பு நல்கும் இராய.சொ. (ப. 56) 'செந்தமிழ் உரைத்த குறுமுனி' எனப் பாடலடிகளைக் கொண்டு தலைப்பிடுவார். இப்பாடலில் கந்தன் இடம்பெறுவான். முக்கண்ணனைப் பற்றிய செய்தியுண்டு. பொதிகைமலை பேசப்பெறும். சடையும், கங்கையும் குறிக்கப்பெறும். சிவம் பெருக்கும் சீலரின் சிந்தனையில் இவை முதன்மைத்துவமாகியிருப்பின் இவற்றுள் ஒன்று அந்தப் பாடலுக்குத் தலைப்பாக மலர்ந்திருக்கும். மாறாகச் சிவத்தைவிடச் செந்தமிழ் முன்நின்ற மனத்தராகச் 'சிவமணியை' இவண் இனங்காண இயலும்.

### தமிழ் இலக்கியச் சிந்தனை

இமைப்பொழுதும் இறையை ஏத்தும் தூய நெஞ்சினரான இராய.சொ. தமிழிலக்கியச் சிந்தனையைப் பரவலாகத் தம் நூலில் படரவிட்டிருப்பது படிப்பாருக்கு மகிழ்வூட்டுவதாகும். 'கம்பனும் சிவனும்' எனப் பெயரிய தம்நூலில் (ப. 17) நீறணிந்த கடவுளை விளக்கிட 'முன்னிக்கடலைச் சுருக்கி' எனவரும் திருவாசகப் பாவினையும், 'ஆழிமழைக் கண்ணா' எனவரும் திருப்பாவைப் பாசுரத்தையும் 'கருவிமாமழை' எனவரும் நைடதப் பாடலையும் ஒருசேர நினைவு கூர்வார். அதனையொப்பப் (பக். 27, 28, 87) பல பக்கங்களில் தேவாரம் சுட்டப்பெறும். திருக்குறள் (பக். 33, 89) புறம் (ப. 285) சிலம்பு (ப. 298) ஆழ்வார் பாடல் (ப. 298) பாரதி வரிகள் (பக். 112, 204) ஆகியவை தமிழ்க்கடலின் விளக்கவுரையில் கிடைக்கும் முத்துகளாகப் பொலிவுற அமைந்துள்ளமையை நூலினைப் படிப்பார் உணரவியலும்.

'ஆழ்வார் அமுது' என்ற நூலிலும் பரஞ்சோதி முனிவர் (ப. ௭) இளங்கோ (ப. ௯) நல்லைச் சின்னத்தம்பி பாவலர் (ப. ௧௫) சேக்கிழார் (ப. ௨௫) பாரதி (ப. ௭௪) சுந்தரர் (ப. ௧௧௯) காரைக்காலம்மையார் (ப. ௯௩) திருவள்ளுவர் (பக். ௩0 + ௭௨, ௧௫௪,

கருஅ, கஎக, கஅச) ஆகிய முன்னோரின் இலக்கியவரிகள் சிவமணியால் பொருத்தமுறப் பொருத்திக் காட்டப்பெறும். இவ்வரிகள் அவரின் இலக்கியப் புலமையை வெளிப்படுத்துவன எனக் கருதுவதைவிடத் தமிழ் இலக்கியச் சிந்தனையின் வெளிப்பாடுகளே எனக் கருதுவது உகந்தது. ஒத்த கருத்துகளை எல்லா உரைகாரர்களும் தருவது இயல்பே எனினும் தமிழ் நூல்களை மட்டுமே நுவல்கின்ற இராய.சொ.வின் சதுரப்பாடு குறிக்கத்தக்கது. பாடல் ஒன்றைக் கண்டதும் இது 'குளகம்' எனத் தமிழ் இலக்கண மரபைச் சுட்டுவதும் (வில்லியும் சிவனும் ப. 26) 'ஆக்கும் ஆறு அயனாம்' எனவரும் வில்லியின் பாடலைக் கண்டதும் 'என்றுமுள தென்தமிழ்' எனத் தமிழை ஏத்தும் கம்பரின் முதற்பாடலைக் குறித்துக் காட்டுவதும் (ப. 15) அவரின் சிந்தனை வீச்சுக்கான சான்றுகள். வில்லியாரின் பாடலொன்றில் 'கவிஞானியர்' என்ற சொல் பயின்றுவர அதனை விளக்குங்கால் "கவிஞானியர் அப்பர், சம்பந்தர் என்க" (ப. 32) என்பவர்தாம் இராய. சொ. கம்பர், இளங்கோ ஆகியோர் பாடலிலிருந்தும், விறலிவிடுதூது நூலிலிருந்தும் பற்பல சான்றுகளை வரையும் 'சிவமணி' சிவனைக் குறித்து வில்லியார் 'ஆதிபகவன்' என மொழியும் பகுதியில் முதற்குறளை நினைப்பது அவரின் தமிழ் இலக்கியச் சிந்தனையை மேலும் சுட்டிக்காட்டும். அதனாற்றான் வ.சுப. மாணிக்கனார் 'வில்லியும் சிவனும்' நூலின் பதிப்புரையில் (ப. கக) "சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரியபுராணம், இராமாயணம், தேவாரம், திருவாசகம், முத்தொள்ளாயிரம் முதலிய பன்னூல் மேற்கோள்களை இப்பதிப்பிற் காணலாம். இடையிடையே வரும் இம்மேற்கோள்கள் கற்கும் சுவையை மிகுக்கின்றன. சில மேற்கோள்கள் தெளிவு தரும் சான்றாக நிற்கின்றன" என்றெழுதுவார்.

## தமிழ்ப் பண்பாட்டுச் சிந்தனை

வடபுலத்துத் திருத்தலங்களுக்கும் சென்று ஈசனைப் பரவியவர் சிவம் பெருக்கும் சீலரான இராய. சொ. தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்பது அவருக்கும் புரிந்த ஒன்றே. தம் நூலில் வாய்ப்புக் கிட்டுமிடங்களில் தமிழ்ப் பண்பாட்டை நெய்துள்ளார் இராய.சொ. ஆழ்வார் அமுது என்ற நூலில் (ப். 22) வைணவ மரபின் படி வரும் பாசுரத்தை "இது தாயார் பாசுரம்" என மட்டும் விளக்கி நிற்காமல் கூடுதலாக "நற்றாய் இரங்கல் துறை என்பர். இலக்கண நூலார்" எனக் குறிக்குமிடம் ஒரு சான்று. வில்லியாரின் பாடலொன்றில் 'முன்னம் பலர்' எனவரும். அதற்கு விளக்கவுரை வரையும் இராய.சொ. "திருமால், பிரமன் ஆகிய இருவரைப் பலர் என்றது தமிழ் வழக்கு" (வில்லியும் சிவனும் ப. 34)

என அழுத்தம் திருத்தமாக அறைகுவார் இராய.சொ. இன்னொரு பாடலில் 'முச்சிகரம்' என்ற சொல் வர, அதனை விளக்கும் போது "திரிகோண மலை. இது இலங்கையில் உள்ள தேவாரத் தலம்" (ப. 73) என்பார் அவர். ஆன்மீகத்தலமென்று சமயப்பூச்சுடன் சுட்டாமல் தமிழ் இலக்கிய முலாமிட்டுத் தேவாரத் தலமென்றது காண்க. ஆதிகாவியமான வான்மீகத்தில் இல்லாத செய்தியாகச் "சீதையை இராவணன் மண்ணொடு பெயர்த்துக் கொண்டு போனான்" என்று மாற்றும் கம்பனைப் புகழும் இராய.சொ. "தொட்டு எடுத்தல் கற்புக்குக் குறைவு என்பது கம்பர் கருத்து" (கம்பனும் சிவனும் ப. 303) எனக் கூறுவார். கவியுளம் கண்ட கவிஞராகவும் பண்பாட்டைப் போற்றும் தமிழராகவும் சிவமணியை இப்பகுதி அடையாளப்படுத்தும். 'பாட்டனைப் பெயரன் எனக் கூறும் பெரிய புராண வரியைக் காட்டி இராவணனுக்குப் பரமன் பிதாமகன் என்ற செய்தியை விளக்கவரும் இராய.சொ. "விரிஞ்சனாம் யாவருக்கும் மேலாம் முன்பன் பேரன் நாடு" என்ற கம்பன் பாட்டைப் பண்பாட்டுச் சூழலின் வண்ணம் விவரிப்பார் (கம்பனும் சிவனும் ப. 160).

1958இல் இராய.சொ.வின் மணிவிழா நிகழ்ந்தபோது அவருக்குத் 'தமிழ்க்கடல்' என்ற பட்டம் வழங்கப்பெற்றது. மேற்குறித்தாங்கு, தமிழ்ச் சிந்தனையாளராக வாழ்ந்த இராய.சொ. 'கோடி கொடுத்த கொடைஞன், குடியிருந்த வீடும் கொடுத்த விழுத்தெய்வமான' வள்ளல் அழகப்பர் பெயரில் விளங்கும் கலைக்கல்லூரிக்குத் தம் சேகரிப்பான 1800 நூல்களடங்கிய களஞ்சியத்தை நன்கொடையாகத் தந்துள்ளார். ஆங்கு வருவார்க்குத் தமிழ்ச்சிந்தனை மேம்பட வேண்டுமென்ற உயரிய கருத்தில் இவ்வாறு நூற்கொடை வழங்கியமைகூட அவரின் தமிழ்ச் சிந்தனையின் ஒரு பகுதியே எனலாம்.

இதுகாறும் கூறியவை தமிழ்மொழி, தமிழ் இலக்கியம், தமிழ்ப்பண்பாடு ஆகியவற்றின் பின்புலத்தில் இராய.சொ.வைப் படம்பிடித்துக் காட்டுபவை. அதற்கும் அப்பால் அவருடைய தமிழ்ச்சிந்தனையின் வீச்சை விளங்கிக் கொள்ள வேறு நூல்களில் அவ்ரைத் தேடலாம்.

காந்தியைப் பற்றிய செய்திகள் மேலிரண்டு வரிகளில் அமையப் பின்னிரண்டு அடிகள் திருக்குறளாகவே அமைய இராய.சொ. இயற்றிய நூல் 'காந்தியும் வள்ளுவரும்' என்ற நூல். காந்தியண்ணலைப் புகழ்வதே நூலின் மையக் கரு எனினும் வள்ளுவத்தை அடிநாதமாகக் கொண்டமை கருதத்தக்கது. காந்தி திருப்பல்லாண்டு, காந்தி பிள்ளைத்தமிழ், கும்மி எனத் தமிழ்ப்பா

வடிவங்களில் காந்தியை ஏத்தும் இராய.சொ. 'ஆடாமோ ஊசல்' என்ற தலைப்பிலான பாட்டில்

தேர்ந்த அறம்தாங்கு செய்ய தமிழ்ப்பாவால்

பாகுபொருவுநறும் பசிய தமிழ்ப்பாவால்

கற்றைப் புகழ்சேர்ந்த கனிந்த தமிழ்ப்பாவால்

என்பன போன்ற வரிகளால் தமிழை முன் நிறுத்தக் காணலாம். (காந்திக்கவிதை ப. 201). தாலாட்டில்

கம்பர் இனியதமிழ்க் கவியின் உயர் கருத்தை
இம்பர் வளர்க்கவரும் ஏந்திழாய்! கண்வளராய் (ப. 231)

என்பன போன்று இலக்கியச் சான்றோர்களை ஏத்துவதும்,

'தெள்ளுதமிழே! திருவருளே! கண்வளராய்'

என (ப. 233) மழலையைத் தமிழாகக் காணுவதும் சிவமணியின் தமிழ்ப் பார்வையைச் சுட்டும். இவ்வாறு பாடும்பொழுது,

'கல்விதனில் பெரிய கம்பனார் பெற்றெடுத்த
செல்வத் தமிழ்ச் சீதைச் செம்பொனாள் நீதானோ (ப. 234)

என்பார் அவர்.

தம் கவலைகளைச் சொல்லி 'எந்நாட்கண்ணி' எனத் தலைப்பிட்டுப் பாவிசைப்பார் இராய.சொ. அங்கும்

அரிய உலகனைத்தும் அறமார் அழகுசெறி
பெரிய இனியதமிழ் பிறங்கும்நாள் எந்நாளோ (ப. 249)

எனத் தமிழ் மேம்பாட்டையே கருதும் சிவமணியைக் காணலாம்.

பெரிய கருத்ததனை பேசுமொழி தம்முள்ளெம்
அரிய தமிழ் வளர ஆதரவே! கண்வளராய் (ப. 237)

எனப் பாடிய அவர் காந்தி பிள்ளைத்தமிழின் சிறுபறைப் பருவ முதற்பாடலில் தென்னாப்பிரிக்காவில் அண்ணலுக்குத் துணைநின்ற வள்ளியம்மை, நாராயணன், நாகப்பன் ஆகிய தமிழர்களை நினைவு கூர்வார்.

காந்தி அந்தாதி. இராய.சொ. நெய்தளித்த மற்றொரு நூல். தலைவிக்கு வண்டைத் தலைவன் தூதுவிடுவதாக வரும் பகுதியில் 'இனிய தமிழ்ச் சுவை தான் குடித்து' (ப. 146) வாழுவதாகத் தலைவன்

கூற்றாகப் புனைகுவார் சிவமணி. இப்பகுதியை எழுதுங்கால் அனைவரையும் பிரிந்து சிறையில் இருந்தவராக இராய.சொ. இருந்துள்ளார். பிரிவுத்துயரைத் தமிழ்தான் தீர்த்தது என்ற தலைவன் கூற்று, படைப்பாளியின் சொந்தக் குரலே என எண்ணுவது பிழையாகாது. 'கிளிவிடுதூது' என்பது இந்நூலின் பிறிதொரு பாடல் தலைப்பு. தாயாரொருத்தி காந்தியிடம் மகளின் இயல்பைக் கூறிவரக் கிளியை அனுப்புகிறாள். தாயின் பேச்சில் "என் தமிழ்ப் பெண்ணின் இயலினை" (ப. 151) என வருவது கவனித்தற்குரியது. அதனையொப்பக் 'கடமையில் பிரிதல்' என்ற பகுதியும் கருதத்தக்கது. தாய் நாட்டின் விடுதலைக்காகப் பிரிந்து செல்லும் தலைவன் தலைவியை நோக்கிக் கூறும் பகுதி.

........ நான் வரும் வரை
நீ நம் இனித்த தமிழ்
நண்ணும் இலக்கியத் தேன்குடித்து
ஆறுக, நாயகியே (ப. 163)

என்கிறான் தலைவன். இவைபோன்ற பல இடங்கள் காந்தியைப் பற்றிய கவிதைகளுக்கிடையே தென்படுவதுதான் இராய.சொ.வின் தமிழ்ச் சிந்தனையை உணரக் காரணங்களாகின்றன. காந்திக் கவிதையை முடிக்கும் சிவமணி, 'வாழி' பாடுகிறார். அங்கேயும்

வாய்ந்தபுகழ் கொண்டு அன்று வாழ்ந்தபெரும்
பாரதத்தாய் வாழ்க! நாங்கள்
ஏந்து தமிழ் வாழ்ந்திடுக (ப. 278)

என முத்தாய்ப்பு அமைப்பார் இராய.சொ. அவர் ஏந்திய தமிழ்ச் சிந்தனைகள் அவரை மட்டுமின்றித் தமிழையும் இனங்காட்டுகின்றன.

# காந்தியச் சிந்தனை

சூ. நிர்மலாதேவி

'தமிழ்க்கடல்' , 'சிவமணி' 'சிவம் பெருக்கும் சீலர்' என்று போற்றப்படும் தமிழறிஞர் இராய.சொ.வின் தமிழ்ப் பணியைத் தமிழறிஞர் நன்கு அறிவர். அவர் ஒரு 'கவிதைக் கடல்' என்பதையும் 'நூறாயிரக்கணக்கான செய்யுட்களின் செல்வர்' என்பதையும் அன்னார் இயற்றிய கவிதை நூல்கள் பறை சாற்றி நிற்கின்றன. அவருடைய கவிதை நூல்களையும் அவற்றில் பெருகி நிற்கும் காந்தியச் சிந்தனைகளையும் வெளிப்படுத்தும் நோக்கில் இக்கட்டுரை அமைக்கப்பட்டுள்ளது.

## இராய.சொ.வின் கவிதை நூல்கள்

காந்தி பிள்ளைத் தமிழ், காந்தியும் வள்ளுவரும் என்ற நூல்கள் முதலாகக் காந்தியடிகள் இறந்ததன் பின்னர்ப் பாடிய காந்தி இரங்கற்பா, வாழ்த்து ஈறாக மொத்தம் 901 பாடல்களை உள்ளடக்கிய காந்திக் கவிதைகளைப் படைத்துள்ளார் இராய.சொ. காந்தியக் கவிதை இலக்கியங்களும் பாடல் எண்ணிக்கை, அவை எழுதப்பட்ட காலம் ஆகியவற்றை உள்ளடக்கிய பட்டியல் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளது. இத்தகு காந்திக் கவிதைகள் தவிர, திருத்தலப்பயணம் (காப்பியப் பெருநூல்) பெண்நிலைக் கண்டனச் செய்யுட்கள், காதற் பாட்டு என்பவையும் இவரது கவிதை வார்ப்புகள் என்பது தெரிய வருகின்றது.

## இராய.சொ.வும் காந்தியடிகளும்

தெய்வீகத்தையும் தேசியத்தையும் இரு கண்களாகப் பாவித்த பசும்பொன் முத்துராமலிங்கத்தைப் போல இராய. சொ. தமிழையும் காந்தியையும் இரு கண்களெனப் போற்றியவர் என்பதை அவரது வாழ்க்கையும் படைப்புகளும் உறுதி செய்கின்றன. தேசிய விடுதலைப் போராட்டத் தீ கொழுந்து விட்டு எரிந்த காலக்கட்டத்தில் மகாத்மா காந்தியடிகளின் தலைமையின் கீழ் இந்தியத் தேசமே ஒருங்கிணைந்து விடுதலை வேள்வித் தீயில் குதித்தது. காந்தியடிகளின் சொற்பொழிவுகளும் விடுதலை வேண்டி அவர் செய்த செயல்பாடுகளும் மட்டுமன்றி அவரது தூய, எளிய வாழ்க்கையே

சிறந்த பாடமாக அமைந்து, இளைஞர்கள் அவர் பின்னே அணி அணியாக வருமாறு ஈர்த்தது. காந்தியின் அக்காந்த சக்திக்குக் கட்டுப்பட்டுத் தம்மை முற்றிலும் அர்ப்பணித்தவராக ஆனார் இராய.சொ. காந்தியின் மீதும் அவருடைய கொள்கைகளின் மீதும் தாம் கொண்ட ஈடுபாட்டைக் கவிதைகளில் பதிய வைத்ததன் மூலம் தமிழுள்ளளவும் காந்தியின் புகழை நிலைநிறுத்தும் பெருந்தொண்டையும் செய்து விட்டார்.

"காந்தியடிகளை ஒத்தவர் உலகில் எவரும் இலர் என்பது என் கருத்து. காந்தியடிகள் வாழ்ந்த காலத்தில் இருந்தமைக்காக நான் பெருமைப்படுபவன். அப்பெரியார் என் குடிலுக்கு எழுந்தருளினார் என்பதில், கண்ணபிரானை வரவேற்ற விதுரனைப்போல் பெரு மகிழ்வு பூத்தவன் நான்" (காந்திக் கவிதைகள், நன்றியுரை) என்று இராய.சொ. காந்தியடிகளைப் பற்றிக் கூறியுள்ள கருத்துகள் காணத்தக்கன.

## இராய.சொ.வின் காந்தியக் கவிதைகள்

இராய.சொ., காந்தியடிகள் தொடங்கிய சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்து கொண்டு 1932இல் சிறை சென்றார். ஓராண்டுச் சிறைத் தண்டனை பெற்ற அவர் ஆறு மாதங்களில் வெளி வந்து விட்டார். சிறையிலிருந்த ஆறுமாத காலத்தில் காந்தியுடன் தொடர்புடைய பகுதிகள் 30 பாடல் தொகை 659 கொண்ட கவிதைகளைப் பாடினார். 1932இல் சிறை சென்ற இராய.சொ. 1932 நவம்பர் இறுதியில் வெளிவந்திருக்கிறார். 1932 மே ஐந்தாம் நாள் 'தாலாட்டு'ப் பாடி, அதைத்தொடர்ந்து பல பகுதிகள் பாடி இறுதியில் சிறையில் 1932 நவம்பர் எட்டாம் நாள் 'தீண்டாமை' என்ற பதிகம் பாடினார். காந்தியடிகளுடன் தொடர்பில்லாத வேறு பாடல்களும் சிறையிருந்தபோது பாடினார் என்றும் தெரிகிறது. சிறையிலிருந்து வெளிவந்தபின்னர் 6 பகுதிகள் 35 பாடல்கள் கொண்ட காந்திக் கவிதைகளையும் பாடினார். 1948இல் காந்தியடிகள் மறைந்த பிறகு 'காந்தியும் வள்ளுவரும்' என்ற காந்தி தொடர்புடைய நூலையும் பாடியுள்ளார். சிறை செல்வதற்கு முன்னர் இரத்தாட்சி ஆண்டு ஆடித் திங்களில் அதாவது 1924ஆம் ஆண்டு இயற்கை வளம் மல்கிய திருக்குற்றாலத் தலத்திலிருந்து 'காந்தி பிள்ளைத் தமிழ்' பாடினார் எனத் தெரிகிறது. சிறையிலிருந்த ஆறுமாத காலத்தில்தான் காந்தியைப் பற்றிய மிகுதியான பாடல்களைப் பாடியுள்ளார் என அறியப்படுகிறது. எனவேதான் சிறையிலிருந்த காலத்தையும் போற்றித் துதித்தார் இராய.சொ. வேலூர்ச் சிறையை 'வேலூர் அரண்மனை' என்று குறிப்பிட்டிருப்பதும் (காந்தி திருத்தசாங்கம் - பாயிரம்), "நான்

சிறையிருந்த ஓராண்டில் இப்பாடல்களை நல்கிய ஆறுதிங்கள்கட்கு வணக்கம் செலுத்துகின்றேன். இந்த அரிய வாய்ப்பு சிறையிராவிட்டால் கூடுவது அருமை" என்றும் உள்ள அவரது கூற்றுகள் நோக்கத்தக்கன (மேற்படி).

இராசேந்திரர், சுபாஷ் சந்தரர் பற்றிய பாடல்களை அவர் பாடியிருப்பினும் அவையும் காந்தி தொடர்புடையனவாக உள்ளமையை அறிகிறோம். இராய.சொ.வின் கவிதைத் திறன் காந்தித்திறன் போற்றுபவையாகவே அமைந்துள்ளமை கண்கூடு.

இராய.சொ.வின் காந்திக் கவிதைகள் அனைத்தும் தொகுக்கப்பட்டுக் காந்திக்கவிதை என்ற ஒரு நூலாக அழகப்பா கல்லூரி வெளியீடாக 1969இல் வெளியிடப்பட்டுள்ளது. மொத்தம் 901 பாடல்கள் கொண்டதாக இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலில் இடம் பெற்றுள்ள எந்நாட் கண்ணி, பேரிகை, விடுதலை, இந்தியா, காதல் மறுமணம், கிளி விடு தூது, கோயில் திறவு, வீரநாடு போன்ற பாடல்களுடன் தமிழ்மொழி (13 கண்ணிகள்) சாதி (33 அகவல்கள்) என்ற தலைப்பில் அமைந்தவற்றையும் உள்ளடக்கிப் புதுமைப்பாக்கள் எனத் தனி நூலும் அச்சிடப்பட்டு (பவ ஆண்டு மாசித் திங்கள் 24ஆம் நாள்) வெளிவந்துள்ளது.

காந்திக் கவிதை நூலிலுள்ள காந்தி பிள்ளைத்தமிழும் தனி நூலாகக் காணக் கிடைக்கின்றது. (தனவைசிய ஊழியன் அச்சுக்கூடம், காரைக்குடி இரத்தாக்ஷி).

காந்தியின் மீது பாடப்பட்ட இருபாக்களான காந்தி கலித்துறை அந்தாதி, காந்தி நான்மணிமாலை ஆகியனவும் 'காந்தி இருபா' என்ற தனி நூலாக விலை அணா 3க்கு வெளியிடப் பட்டுள்ளது. சிறையிலிருந்தபோது பாடிய பாக்களைச் 'சிறைப்பாக்கள்' என்றே குறிப்பிடுகிறார். இராய.சொ. (காந்தி கிருபா, முன்னுரை)

இனி, காந்தி பற்றிய நூல்களான காந்தி பிள்ளைத்தமிழ் காந்தியும் வள்ளுவரும், காந்தி அந்தாதி, காந்தி நான்மணிமாலை போன்றவற்றையும் பிற பாடல்களையும், புதுமைப்பாக்கள் என்று அவரால் குறிப்பிடப்பெறும் எந்நாட்கண்ணி முதலாக வீரநாடு ஈறாக உள்ள பாடல்களையும் அடிப்படையாகக் கொண்டு அவற்றின் மூலம் வெளிப்படுத்தப் பட்டிருக்கும் காந்தியச் சிந்தனைகளைக் காணலாம்.

அன்னாருடைய படைப்புத்திறன், கவிநயம் போன்றவை கவிதைகளில் வெளிப் படுமாற்றையும் விளங்கக் காணலாம்.

## காந்தி பிள்ளைத்தமிழ்

காந்தியடிகள் மீது பிள்ளைத் தமிழ் பாடியதற்குக் காரணமாக இராய.சொ. நூல் முகவுரையில்,

"கவிகளுளெல்லாம் பாடுதற்கு மிக இனிமை தருவது பிள்ளைக்கவி என்பது அனுபவத்திற் கண்ட உண்மை. அதனாலேயே எளியேனை ஆட்கொண்ட எம்பெருமான் காந்தியடிகளார்க்கு ஏழை பிறந்த தமிழ் மொழியில் ஒரு பிரபந்தம் ஆக்க வேண்டுமென்ற நசையெழ, அது பிள்ளைக் கவியாகவே பிறங்க வேண்டுமென்ற முடிவிற்கு வந்தேன். அன்றியும், சிறியேன் ஒரு புலவனல்லேன்; பிள்ளைத் தன்மையுடையவனேயாதலின், பிள்ளைக்கவி பாடுதலே எற்குப் பொருத்தமுடைத்து. யான் இக்கவி பாட முந்தியமைக்குக் காரணம் காந்தியடிகள் மீது கொண்ட காதலே" எனக் குறிப்பிட்டுள்ளார்.

பெரியார்கள் மீது பாடப்பெற்ற பிற பிள்ளைத்தமிழ் நூல்கள் எல்லாம் அன்னாரின் மறைவிற்குப் பின் பாடப் பெற்றவையே. ஆனால் காந்தி பிள்ளைத்தமிழ் என்ற இந்நூல் அவர் உயிருடன் உலவிய காலத்திலேயே (1924) பாடப்பெற்ற தனிச்சிறப்பைக் கொண்டதென்பது குறிப்பிட்டுக் கூறத்தக்கதாகும்.

தமிழ்ச் சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகிய பிள்ளைத்தமிழ் நூல்கள் போன்றே காப்பு முதல் சிறு தேர்ப்பருவம் வரையிலான 10 பருவங்களைப், பத்துப்பத்துப் பாடல்களில் 100 பாடல்களாக இப்பிள்ளைத்தமிழை அமைத்துள்ளார்.

பிற பிள்ளைத்தமிழ் நூல்களில் காப்புப்பருவப் பாடல்கள் இறைவனைக் காப்பாகக் கொண்டு அமைந்திருக்கக் காந்தி பிள்ளைத் தமிழில் காந்தியின் குணநலன்களையே காப்பாகக் கொண்டு பாடப்பட்டுள்ள புதுமையைக் காண்கிறோம். திருவள்ளுவர் தாம் யாத்த திருக்குறளில் இறைவனின் பெயரைக் கூறாது, இறையின் குணநலன்களையே போற்றிக் கடவுள் வாழ்த்து அமைத்துள்ள முறை போன்றே இராய.சொ.வும் இந்நூலில் அமைத்துள்ள சீர்மையைக் காண்கிறோம்.

அனைவரும் விளங்கிக் கொள்ளும்படியான எளிய சொற்களைக் கையாண்டு இப்பிள்ளைத்தமிழைப் பாடியுள்ளார்.

மதிச் செஞ்சடைக் கடவுளை அடையும் தேவர் போல்" என்று கூறுவதால் இறைவன் அனைவரிலும் சிவனே ஏற்றமுடையான் என்பது கொள்ளப்படுகின்றது.

"மூவாமுதல ஈசனும்" என்றும் சிவனைப் பற்றிக் கூறுவது சிவனின் முழு முதல் தன்மையை வலியுறுத்துவதாகும். "மூவா முதல்" என்னும் சொற்றொடர், "சமுத்திரத்தின் நஞ்சுண்டும் சாவா, மூவாச்சிங்கமே" என்ற அப்பர் தேவாரத்தை நினைவூட்டுகின்றது.

கும்பகர்ணன் வதைப்படலத்தில், "கண்ணுதல் பெருங்கடவுள்" என்று சிவபெருமானைக் கூறி மகிழ்வான் கம்பன். இதுபோன்று திருவிளையாடற் புராண ஆசிரியர், பரஞ்சோதி முனிவர் "கண்ணுதற் பெருங்கடவுளும் கழகமொடு அமர்ந்து" என்றும் சிறப்பித்துக் கூறுவார்.

"மான் மறிக்கரத்து வள்ளல்" என்று ஒரு இடத்தில் குறிப்பிடும் கம்பன் ஆதவன் தோற்றத்தைக் கூறுங்கால், "உதயகிரி எனும் கடவுள் நுதல் கிழித்த விழியே போல் உதயம் செய்தான்" என்றும் கூறி மகிழ்வான்.

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட, உலகம் ஏத்த
விண்ணவரும், முனிவரரும் வேதியரும்
கரம் குவிப்ப, வேலை என்னும்
மண்ணும்மணி முழவு அதிர வான் அரங்கில்
நடம்புரி, வாள் இரவி ஆன
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தால்
என விரிந்த கதிர்கள் எல்லாம்

என்ற பாடலிலே சூரியனுக்கும் சிவனுக்கும் ஒப்புரைப்பது சிறப்பாகும்.

இராவணன் சிவபூசை செய்தான் என்பதை "ஈசனை இமையாமுக்கண் இறைவனை இருமைக்கு ஏற்ற பூசனை முறையிற் செய்து" என்று ஓர் இடத்தும், "பூசனைத் தொழில் புரிந்து, தான் முறைமையிற் போற்றும் ஈசனைத் தொழுது" என்று பிறிதோரிடத்தும் கவிமொழியாகக் கூறுவான்.

இப்படிக் கம்பனும் சிவனும் என்ற நூலில் கவிமொழியாகவும், பிறமொழியாகவும் பாத்திரப் படைப்புகளின் வாயிலாகவும் கம்பன் சிவனைப் போற்றுவதைக் குறிப்பிடுகின்றார்.

# உரையும் பதிப்பும்

நா. புனிதப்பொற்கொடி

'தமிழ்க்கடல்' என அன்போடு தமிழ் நெஞ்சங்களால், அறிஞர் பெருமக்களால் அழைக்கப்பெற்ற பெருமை மிக்கவர் ராய.சொக்கலிங்கம். இவர் வருண குலாதித்தன் மடல், கூளப்ப நாயக்கன் விறலிவிடுதூது, சேதுபதி விறலிவிடுதூது, பாவைப்பாட்டு முதலிய நூல்களை உரையோடு பதிப்பித்திருக்கின்றார்.

"தமிழின் சிற்றிலக்கியங்கள் சிலவற்றையும் பேரிலக்கியங்கள் சிலவற்றையும் செம்மையாகவும் சிறப்பாகவும் பதிப்பித்துள்ள ராய.சொ.வின் பதிப்புத்துறை உத்தி, புலவர் பெருமக்களால் போற்றிப் பாராட்டப் பெற்றுள்ளது. யாப்பிலக்கணம் வழுவாமல் சொற்பிரிவு செய்து, குறைகளைச் சுட்டி, திருத்தங்களைப் புகுத்திச் சீர்மையுடன் திகழும் ராய. சொ.வின் பதிப்புகள் அனைத்தும் 'பதிப்புக்கலை'யின் முழு சௌந்தர்யத்தையும் காணுமாறு வெளிவந்துள்ளன. 'அரும்பதவுரை', 'அடிக்குறிப்புரை', முதற்குறிப்பு அகராதி' யுடன் வெளியிட்டுள்ள 'கூளப்ப நாயக்கன் விறலிவிடுதூது' - 'வருண குலாதித்தன் மடல்', "திருவிளையாட்டு புராணம் - மதுரைக் காண்டம்" "அருணாசலப்புராணம்" "ஆழ்வார் அமுது", "திருவாசகத் தேன்" - திருமுறைத் தீங்கனி" - பிள்ளைப் பாட்டு முதலிய பதிப்புகள் புகழார்ந்தவை. தமிழ்க்கடல் வழங்கிய பதிப்புகள் விலை மலிவு கொண்டவை; பிழை மலிவு கொள்ளாதவை" எனக் குன்றக்குடி பெரிய பெருமாள் தமது 'தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள்' என்ற நூலில் குறிப்பிடுவார்.

வருணகுலாதித்தன் மடல், கூளப்பநாயக்கன் விறலி விடு தூது, சேதுபதி விறலிவிடுதூது, பாவைப்பாட்டு என்ற இந்நான்கு சிற்றிலக்கியங்கள் மூலம் வெளிப்படும் தமிழ்க்கடலின் உரைத்திறன், பதிப்புக் கொள்கைகளை அறிமுகம் செய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## நூல் முகம்

நூலுக்கு முகமாக அமைவது நூல் முகம்.

கூளப்ப நாயக்கன் விறலிவிடுதூதுப் பதிப்பின் நூல் முகம், 'தோற்றுவாய்', 'கூளப்ப நாயக்கன்', 'சுப்ர தீபக்கவி', 'நூல் வரலாறு',

'யாப்பு', 'மொழி', 'நூல் நயம்', 'இறுவாய்' என எட்டுத் தலைப்புகளில் அமையும். பாவைப் பாட்டு பதிப்பின் நூல் முகம், 'தோற்றுவாய்', 'எம் பாவாய்', 'பாவை', 'பறையும் பிறவும்', 'மார்கழி நீர்', 'துயில் எழுப்பல்', 'விண்ணப்பம்'; 'யாப்பு', 'மாணிக்க வாசகர்', 'ஆண்டாள்', 'இறுவாய்' எனப் பதினொரு தலைப்புகளில் அமையும். வருண குலாதித்தன் மடல் பதிப்பின் நூல் முகம் உட்தலைப்பின்றி அமைந்துள்ளது. சேதுபதி விறலி விடு தூதுப் பதிப்பில் முன் உரை என்ற தலைப்பில் நூல் முகம் அமைந்துள்ளது. உட்தலைப்பின்றி முன் உரை மிக விரிவாகத் தரப்பட்டுள்ளது.

## நூலாசிரியர் வரலாறு

நூலாசிரியர் வரலாற்றில், அவர்தம் பெயர், ஊர், குலம், சமயம், காலம் முதலானவற்றைத் 'தமிழ்க்கடல்' ஆராய முற்பட்டுள்ளார்.

"இந்நூலின் (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது 8.8) ஆசிரியர் பெயர் சுப்ர தீபக் கவி. இவர் மதுரை ஜில்லா திருமங்கலம் பகுதியினர். இன்னார் பிறந்த வகுப்பில் தட்டார் என்ப. இவர் நிறைந்த புலமை வாய்க்கப் பெற்றிருந்தார். இவர் பாட்டுக்களெல்லாம் தேனும் பாலும் பெருகி ஆறாக ஓட்டமெடுப்பது போன்ற இனிமையும் ஒழுங்கும் கொண்டவை. இவர் எக்காலத்தவர் என்பதை அறியத் தக்க திறவுகோல் இந்நூலின் உள்ளேயே இருக்கின்றது. அதனைத் தேடி எடுக்கும் சிரமம் கூடப் படிப்பவர்க்கு வேண்டாம். அச்சாவியை இங்கு எடுத்து வைக்கிறேன்.

> திக்கெல்லாம் கொண்டாடும் செங்கோல் விஜயரங்க
> சொக்கநா தேந்தர துரைராஜன் – சத்ரபதி
>
> சேதுபதி பாண்டியகுல தெட்சணசிங் காசனந
> ராதிபதி மெச்சு நரபாலன் (34, 35)

என்ற கண்ணிகள் நூலாசிரியர் காலத்தைக் கணிக்க நன்கு உதவுகின்றன. விஜய ரங்க சொக்கநாத துரைராஜனால் பாராட்டப் பெற்றவன் கூளப்ப நாயக்கன் என்பதால் அவன் காலத்தவனாகவே கூளப்ப நாயக்கன் இருத்தல் வேண்டும். கூளப்ப நாயக்கன் காலத்து உடன் இருந்தவனே சுப்ரதீபக் கவி என்று சொல்ல வேண்டுவதே இல்லை. இக்கண்ணிகளில் கூறப்படுபவனே ஒரு காலத்தில் மதுரையை ஆண்ட விஜயரங்க சொக்கநாத நாயக்கன் என்பவன். இவன் மதுரையை ஆண்ட காலம் கி.பி. 1676 முதல் 1732 எனச் சரிதம் கூறும்.

இந்தக் காலமே கூளப்ப நாயக்கன் காலமும் சுப்ரதீபனின் காலமும் என்பதில் ஐயம் இல்லை. எனவே ஏறக்குறைய இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக் கிடையில் தோன்றியது இந்நூல் என்று கொள்ள வேண்டும்.

இந்நூலாசிரியராகிய சுப்ரதீபர், பெரும் புலவராக இருந்து, மதுரைச் சோமசுந்தரக் கடவுள் மீது திருவிளையாடல் புராணம் இயற்றிய கல்விக்கடல் பரஞ்சோதி முனிவரிடம் கல்வி கற்றவர் என ஊகிக்க இடம் இருக்கிறது.

கோமுனிவர் கொண்டாடும் கூடல் பரஞ்சோதி
மாமுனிவர் செம்பொன் மலர்ப்பாதம் நான் மறவேன்

என்று சுப்ரதீபக் கவி, தாம் பாடிய கூளப்ப நாயக்கன் காதலில் கூறுவதால், கவி, முனிவர் மாணாக்கர் எனவும் ஆசிரியர் அஞ்சலியாகவே இப்பாட்டைச் செய்தார் என்றுமே கொள்ள வேண்டுவதாகிறது'' எனச் சுப்ரதீபக் கவியின் வரலாற்றைத் 'தமிழ்க்கடல்' தெளிவுபடுத்துவார். (பக். 5-7).

''இந்நூல் (சேதுபதி விறலி விடு தூது) செய்தவர் சதாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர் என்பவர். இவர் நூறு வருடங்கட்கு உட்பட்டவர் என்று தெரிகிறது. அஷ்டாவதானம் ஆதி சரவணப் பெருமாள் கவிராயரின் பேரர் இவர். இவர் தந்தையார் பெயர் அருணாசலக் கவிராயர். இவர் இராமனாதபுரம் ஜில்லா முதுகுளத்தூரிலே பிறந்தவர். இந்நூலாசிரியர் வேறு பல நூல்களும் செய்திருக்கின்றார். இன்னார் சேது நாட்டின் பரம்பரைப் புலவரைச் சேர்ந்தவர். இவர் இந்நூலில் தன்னைப் பற்றிப் பின்வரும் வரிகளால் பேசுகின்றார்.

. . . . . . . . . . . ஆதி முதுகுளத்தூர்
மேவுவடி வேலன் அருள் மேவிவளர் நாவலவ
தீர அவதானம் செய்சரவ ணப்பெருமாள்
பேரன்என வந்த பிரபலவான் – சாரம்
தரும்துவாத் ரிம்சதாவ தானிபுல வோர்யா
வருந்துதிக்கும் பூங்கணைவில் மாரன் திருந்தும் எழில்
நாடு புகழ்சரவணப் பெருமாள்

மேவு வடிவேலன் அருள்மேவி வளர் பாவலராகிய சரவணப் பெருமாள் என்று தன்னைச் சொல்வதாலும் இந்நூலில் வேறுபல இடங்களில் பேசுவதையும் பார்க்கும்போது இவர் சிறப்பாக முருகன்

வழிபாடு உடையவர் என்று தெரிகிறது. பொதுவாக இவர் கடவுள் பக்தி நிறைய உடையவர் என்பதை நூலின் பலப்பல இடங்களிலும் பார்க்க முடிகிறது.

கடவுளைப்பற்றி இந்நூலில் காணப்படும் பக்தி ததும்பும் வரிகள் மயிர்க்கூச்சை உண்டாக்குகின்றன.

ஆகும் பசந்த அழகிய நாயகியோர்
பாலும் சுமந்த பரஞ்சுடரை - மோகமுள்ள
தொண்டர் உள்ளத் தேவிளங்கும் தூண்டா மணிவிளக்கை
அண்டருக்கும் தேடரிய ஆரமுதை - முண்டகத்தாள்
நித்தம் துதித்துமுத்தி நீள்நெறிசேர் மூவர் அன்புச்
சித்தம் தழைத்த சிவக்கொழுந்தை. . . . . . . . . . . . . .
வில்வத்தின் பால்முளைத்து வேதமுத லாய்க்கிளைத்த
செல்வத்தைக் கண்டு தெரிசித்து

என்றும்,

. . . . . . . . . . . . . . . . . வானுலவும்
கம்பத்தின் முன்நின்று கண்டேகோ தண்டமெனச்
செம்பொற் கிரிவளைத்த சேவகனை - நம்புமன்பர்
உள்ளத் திருக்கும் உரவோன் உருவிலான்
கள்ளத்தை மாற்றும் நெற்றிக் கண்ணவனை - வள்ளமுலைப்
பாலுண்ட பிள்ளை பதிகத்துக் காப்பிறவி
மேலுண்டோ இல்லைஎன்ற வேதியனை - சேலுண்ட
கண்மணியைத் தென்னவர்கோன் கண்மணியை நன்மணியைப்
பெண்மணியை மாலையிட்ட பெம்மானை

என்றும் சிவபிரானைப் பற்றிப் பேசுகிறார்.

. . . . . . . . . . . . . . . . . . நல்ல தெய்வ
வாரணத்தைத் தோய்ந்தமத வாரணத்தை ஓர்மருப்பு
வாரணத்தை ஈன்றபிடி வாரணத்தை - ஆரணத்தாய்
'எனப்பா காழிவளர் என்னப்பா உண்ணப்பா
ஞானப்பால்'

என்று ஊட்டும் நாயகியை வானிறைஞ்சும்

தன்பதத்தில் ஏற்றிமலர் தான் அருச்சிப் பார்வணங்கும்
முன்பதத்தில் ஏற்றிவைக்கும் முக்கனியை - அன்புத்தேன்
ஊற்றிருக்கும் மெய்யடியார் உள்ளமலர் ஆலயத்தில்

வீற்றிருக்கும் ஜோதி விளக்கொளியை நாற்றிசைக்கும்
அன்னை மருதூர் அழகிய நாயகியைச்
சந்நிதிமுன் நின்று தரிசித்தேன்."

என்று அம்பிகையைப் பற்றி நுவல்கின்றார்.

.............. மோதுகணை
காதண்ட வாங்கிக் கதிர்மகன்மூத் தோனை வென்ற
கோதண்ட ராகவனைக் கும்பிட்டு"

என்று திருமாலைப் பற்றிச் செப்புகிறார்.

இந்நூலாசிரியர் தமிழ்ப்பற்றும் அறப்பற்றும் பெரிதும் உடையவர் என்பதை நூல் நன்கு நவில்கின்றது.

சேர்க்கையுடன் பாநுமதி தெற்குவடக்கானாலும்
வாக்கிரண்டு சொல்லாத மாண்பான்

என்ற பாட்டு இவ் ஆசிரியர் உண்மையிற்பாற் கொண்ட திண்மைக் காட்டுகிறது" எனச் சேதுபதி விறலி விடு தூது நூலாசிரியர் சதாவதானம் சரவணப் பெருமாள் கவிராயரின் வரலாற்றைத் 'தமிழ்க்கடல்' தெளிவுபடுத்துவார்.

இதனை ஆக்கிய ஆசிரியர் யாரெனத் தெரியவில்லை. எனத் 'தமிழ்க்கடல்' வருண குலாதித்தன் மடல் நூல் முகத்தில் குறிப்பிடுவார்.

திருவெம்பாவை பாடியவர் மாணிக்க வாசக சுவாமிகள், மணிவாசகரின் புலமையும் பெருமையும் அப்பாவைக்கும் அப்பாற்பட்டன. அப்பெரியாரைப் போலப் பத்தி வலையில் பட்டோர் யாரும் இலர். அவர் பாடியருளிய திருவாசகத்துக்கு இணையான "ஊனினை உருக்கி உள் ஒளி பெருக்கும்" ஒரு நூல், அது தவிர எதுவும் இல்லை.

திருவா சகந்தனை ஓதாத
நாவும் செவியுறக் கேட்டு,
உருகாத நெஞ்சமும் என் படைத்தார் இவ் உலகவரே

என்றார் ஓர் அன்பர்.

மனம் கரைத்து மலம் கெடுக்கும் வாசகம்

என்றார் ஓர் அறிஞர்.

**ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே**

என்றார் ஒரு பெரியார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவாசகத்தின் பகுதி திருவெம்பாவை என நூலாசிரியர் பெயர் சுட்டிக் காட்டப்பெற்று அவரது நூலின் சிறப்பே விதந்து கூறப்படும். (பாவைப்பாட்டு நூல் முகம்).

திருப்பாவை பாடியவர் ஆண்டாள் நாச்சியார். அப்பெரியார்க்குக் கோதை என்று ஒரு பெயர் உண்டு. அவர் பாடிய பாசுரங்கள் திவ்யப் பிரபந்தத்தை அலங்கரிக்கின்றன. நாலாயிரத்துள் திருப்பாவை தவிர, **௧௪௩** (143) பாடல்கள் ஆண்டாள் பாடியிருக்கின்றார். அருமையான பாடல்கள். பெண்ணைக் குறைத்துப் பேசுவாரைத் தலையில் அடிப்பது போன்ற அற்புதம் வாய்ந்தவை இப்பெண் தெய்வத்தின் பாடல்கள்.

திருப்பாவையின் பெருமை கூறும் ஒரு பாட்டை இங்குக் காட்டினால் போதும்; பாதகங்கள் எல்லாவற்றையும் தொலைத்து விடும். வேறு என்ன செய்யும்? பரமனுடைய திருவடியை நமக்குக் காட்டும். பின்னர்ப் பேதங்கள் எல்லாவற்றுக்கும் விதையாகவும் அமையும் எது? கோதை என்னும் ஆண்டாள் தமிழ். அந்தச் சூடிக் கொடுத்த சுடர்க் கொடியின் திருப்பாவை முப்பதையும் படித்து அறியாதவர்களை இவ் உலகம் தாங்குவது வீண்.

பாதகங்கள் தீர்க்கும் பரமன் அடிகாட்டும்
வேதம் அனைத்துக்கும் வித்து ஆகும் – கோதைத்தமிழ்
அறியாத மானிடரை
வையம் சுமப்பதூஉம்
வம்பு.

இங்ஙனம் நூலாசிரியர் பெயர் சுட்டிக் காட்டப்பெற்று அவரது நூலின் சிறப்பே விதந்து கூறப்படும். (பாவைப்பாட்டு நூல் முகம்).

## நூலின் புறநிலைக் கட்டமைப்பு

நூலின் புற நிலைக் கட்டமைப்பு ஒவ்வொரு நூலிலும் எவ்வாறு அமைந்துள்ளது என்பது குறித்தும் 'தமிழ்க்கடல்' விளக்கம் தந்துள்ளார்.

திருவெம்பாவை, இருபது பாட்டு உடையது. திருப்பாவை, முப்பது பாடல் உடையது.

வருண குலாதித்தன் மடல் நானூற்று எழுபது கண்ணிகள் கொண்ட கலிவெண்பாவால் ஆக்கப்பெற்றது. (வருண குலாதித்தன் மடல் நூல் முகம்).

கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது கககச (1144) கண்ணிகள் கொண்ட கலிவெண்பாவால் ஆக்கப்பெற்றிருக்கிறது. (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது நூல் முகம்)

சேதுபதி விறலிவிடுதூது 'கலிவெண்பா' என்னும் யாப்பின் பாற்பட்டது. நூல் முழுதும் வெண்தளை விரவி வெண்பா இலக்கணத்துடன் ஒரே சங்கிலித் தொடராக அமைக்கப்பட்ட 1245 கண்ணிகள் கொண்டது. (சேதுபதி விறலி விடு தூது நூல் முன் உரை).

## யாப்பு

'தமிழ்க்கடல்' நூல் முகத்தில் யாப்பு பற்றிய செய்தியையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

இந்நூல் (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது) 1144 கண்ணிகள் கொண்ட கலிவெண்பாவால் ஆக்கப்பெற்றிருக்கிறது. எனினும் 41, 42, 318, 139, 394, 395, 570, 571, 1073, 1074, 1075 ஆகிய பதினொரு கண்ணிகள் கலிவெண்பாவில் அமைய வேண்டிய வெண்தளை யாப்புக்கு மாறுபட்டிருக்கின்றன. இவற்றை யாப்புக்கு அமைய நான் திருத்த விரும்பவில்லை. ஆசிரியர் அவ் இடங்களிலெல்லாம் யாப்பை முரணினாலும் இப்படித்தான் இருக்க வேண்டும் எனக் கருதியே செய்தனர் என எனக்குத் தோன்றுவதாலேயே, அவ் இடங்களில் சந்தநயம் ஒன்றுக்கே ஆசிரியர் சிறப்புத் தந்தார் என்றே நான் நினைக்கிறேன். இவ் விஷயத்தை விரித்தால் நூல்முகம் பெருகி விடும் என அஞ்சி விடுகின்றேன். பாவலர் அவ் அவ் இடங்களை ஆராய்ந்து முடிவு கட்டட்டும். இங்ஙனம் பிழை என உணர்ந்தும் ஏட்டில் உள்ளவாறே தமிழ்க்கடல் பதிப்பித்துள்ளார்.

## மொழி

மொழி நடை பற்றியும் தமிழ்க்கடல் தமது நூல் முகத்தில் குறிப்பிட்டுள்ளார். கொச்சைச் சொற்கள் இந்நூலில் (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூதில்) இடம்பெற்றுத் தான் இருக்கின்றன. என்னால் வெளியிடப்பெற்ற சேதுபதி விறலிவிடுதூது முன்உரையில் கூறப்பெற்ற காரணத்தையே இதற்கும் சொல்லுகிறேன். சொற்களைக் கண்டு ஒழுக்கம் வாய்ந்தவர் அஞ்சவேண்டிய அவசியம் இல்லை.

இன்பத்தை இல்லில் ஒல்லுமாறு நுகர்வாரை எந்தச் சக்தியும் தடுத்தல் முடியாது; தடுக்கவும் கூடாது. இங்ஙனம் பிழை அல்லது, பொருத்தமற்ற, அல்லது மறுத்தற் கிடமான பகுதிகள் ஏட்டில் இருப்பின், அதனை மாற்றாது ஏட்டில் உள்ளவாறே தமிழ்க்கடல் பதிப்பித்துள்ளார்.

இந்நூல் (சேதுபதி விறலி விடு தூது) சிற்றின்ப சம்பந்தமாக எல்லை கடந்து சென்றிருக்கின்றது என்பது உண்மையே. இடக்கர் அடக்கலுக்குரிய சொற்கள், சொற்றொடர்கள் பெய்யப் பட்டிருக்கின்றன. பலர் சேர்ந்து கூட்டமாக இருந்து கூசாமல் படிக்க முடியாதபடி சில இடங்கள் இந்நூலில் இருக்கத்தான் செய்கின்றன. இருந்தாலும் அவற்றை நீக்கி விட்டால் நூலின் அழகு கெட்டுச் சிதைந்து விடும் என்று அப்பகுதிகளை ஒதுக்கவில்லை. விருப்பமில்லாதவர் அப்பகுதிகளை விட்டு விடலாம். அவற்றை விருந்தாகக் கொள்ளும் காதலர் தங்கட்குள் உண்டு மகிழலாம். இங்ஙனம் மூல நூலில் உள்ளவாறே தமிழ்க்கடல் பதிப்பித்துள்ளார்.

### பாட்டுடைத்தலைவன் வரலாறு

நூலாசிரியர் வரலாறன்றி, நூலின் பாட்டுடைத்தலைவன் வரலாற்றையும் வாசகருக்கு அறிமுகம் செய்ய தமிழ்க்கடல் முயன்றுள்ளார்.

இவ்விறலி விடு தூது (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது) நாகம கூளப்ப நாயக்கன் மீது பாடப்பெற்றது. நாகம கூளப்ப நாயக்கன் என்பவன் மதுரை ஜில்லாவிலுள்ள நிலைக்கோட்டை என்னும் பகுதியின் தலைவனாக இருந்தவன். அவன் இந்நூலாசிரியரைப் பெரிதும் ஆதரித்தவன். பாட்டுடைத் தலைவனாகிய கூளப்ப நாயக்கன் ஆசிரியரால் தேன் ஒழுகும் தமிழில் மிகப் பலபடப் பாராட்டப் பெறுகின்றான்.

**குன்றில் கருதார் குடும்பம் குடிஏற**
**முன்றில் குமுறுமணி மும்முரசான் – நின்றஅடி**
**தூக்கினார் சென்னி துடிக்கத் துணிந்து விடும்**
**ஆக்கினா சக்கரம்போல் ஆணையான்** **(55-55**

**தண்தார் மகுடம் தடவும் ஜயவீர**
**கண்டா மணிமுழங்கும் காலினான் – மண்டுசமர்**
**யுத்தகளத்து ஒன்னார் உயிர்மேய்ந்த குற்றுடைவாள்**
**வைத்தணைத்துக் கட்டும் மருங்கனான் – கைத்தலத்தில்**

**ஐந்தருவும் ஐந்துவிரல் ஆகித் தருவளனச்**
**செந்தமிழ்க்கு நல்குமலர்ச் செங்கையான்** ௫௫-௫௬

என்பன கூளப்ப நாயக்கனைப் பற்றிய புகழ்ச்சிகளுட் சில.

கூளப்ப நாயக்கன் இந்நூலாசிரியர் காலத்தவனே. கூளப்ப நாயக்கன், நாகம கூளேந்திரன், பெரிய நாகன் என்பன இவன் பெயர்கள். இவன் தந்தை பெயர் சிந்தம கூளேந்திரன்.

**ஐம்பதூர்க் கேகி அலைந்துபலன் ஏதென்றே**
**ஒன்பதூர்க் கேக ஒருமித்தேன்.** ௯௯௫

என்பன போன்றவற்றால் இவனுக்கு ஒன்பது ஊர்கள் சிறப்பாக இருந்தன எனக் கொள்ளலாம். இவனுடைய தலைநகருக்குப் 'பெஞ்சை' அல்லது 'நவபுரி' என்று பெயர். இவன் திருமால் வழிபாடு உடையவன் என்பதை,

**திம்மரா யப்பெருமாள் செஞ்சாரண சேகரனை** ௫௪

என்பதால் அறிகிறோம். இங்ஙனம் பாட்டுடைத் தலைவன் வரலாற்றில் அவர்தம் பெயர், ஊர், வேறு பெயர்கள், தந்தை பெயர், சமயம், காலம் முதலானவற்றைத் 'தமிழ்க்கடல்' குறிப்பிட்டுள்ளார்.

பாட்டுடைத் தலைவனாகிய சேதுபதியை இவர் (சேதுபதி விறலி விடு தூது நூலாசிரியர்) அளவுக்கு மேல் புகழ்ந்து செல்கின்றார். சான்றாகச் சிலவற்றை இங்கே காணலாம்.

**மாமாலுக் காக வனமான்மேல் வாளிதொட்ட**
**பூமான் சிவசாமி பூபாலன்**

**. . . . . . . . . . . . . . . இமயமான்**
**சேர்க்கையுள்ள வேந்தன் சிவசாமி சேதுபதி**

என்பன சிவசாமி சேதுபதியைப் பற்றி ஆசிரியர் கூறுவனவற்றுள் சில.

இந்தச் சிவசாமி சேதுபதி என்பார் இந்நூலாசிரியர் காலத்து இருந்திருக்க வேண்டும். நூறு ஆண்டுகளுக்கிடையில் இப்பெயருடன் சேதுபதிப்பட்டத்திற்குரிய உரிமைபெற்று யாரும் இருந்ததாகக் காணோம். எனவே சிவசாமி என்பவர் சேதுபதியின் குடியில் பிறந்தவராக இருத்தல் கூடும். இவரைப்பற்றித் திட்டமாக எதுவும் தெரிந்து கொள்ளக்கூட வில்லை.

சிவசாமி சேதுபதி யாராக வேண்டுமானாலும் இருக்கட்டும். அவர் யார் என அறிவதில் நாம் அதிக அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டாம். (சேதுபதி விறலி விடு தூது முன் உரை)

## பதிப்புக் குறிப்பு

தமிழ்க்கடல் வருண குலாதித்தன் மடல் என்ற நூலின் நூல்முகத்தில் பதிப்பிற்கான காரணத்தைத் தெளிவுபடுத்தியுள்ளார். "பழைய சில பதிப்புகள் பிழை மயமாகக் காணப்படுகின்றன. இந் நூலுக்குத் திருந்திய நல்ல பதிப்பு ஒன்று இதுகாறும் இல்லை. எனவே இதனைப் பதம் பிரித்து விளக்கம் எழுதி வெளியிடுகின்றேன்" என விளக்கம் தந்துள்ளார்.

ஒவ்வொரு நூலையும் பதிப்பிக்கத் தூண்டுகோலாக அமைந்தோர், துணை நின்றோர், ஏடு தேடிச் சென்றவிடங்களி லெல்லாம் தோன்றாத் துணையாக நின்றுதவியோர், ஏடுகளை ஒப்பு நோக்கியறிய உற்ற துணையாக உடனிருந்தோர், அச்சுப்படி திருத்த அவர் எடுத்துக் கொண்ட முயற்சி, அதற்குத் துணை நின்றோர் பற்றி அறிய முடியவில்லை. இவற்றை அந்தந்தப் பதிப்பின் முகவுரையில் கொடுத்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

தமிழ்க்கடல் காந்தி ஆண்டு **எகூ** (1948)இல் 'வருண குலாதித்தன் மடல்' என்ற நூலையும், 28-02-1947 அன்று 'சேதுபதி விறலி விடு தூது' என்ற நூலையும் காந்தி ஆண்டு **அச** (1953)இல் 'பாவைப்பாட்டு' என்ற நூலையும், காந்தி ஆண்டு **அ0** (1949)இல் 'கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது' என்ற நூலையும் பதிப்பித்துள்ளார்.

## மேற்கோள் விளக்கம்

தமிழ்க்கடலின் தனிச்சிறப்புக்களுள் ஒன்று, அவர் பதிப்பித்த அனைத்து நூல்களிலும், மிகச் சிறந்த முறையில் 'ஒப்புமை மேற்கோள் விளக்கம்' அமைத்துள்ளமையாகும். அவற்றை, அவ்வப்பகுதியின் அடிக்குறிப்பில் அமைத்துள்ளார். இவ்வொப்புமை மேற்கோள் விளக்கம், நூல் கல்வியில் அவர்க்கு இருந்த பரந்துபட்ட அறிவை விளக்கும். மூலநூல்களில் காணப்படும் குறிப்பிடத்தக்க சொல், தொடர், அடி முதலானவற்றிற்கு இணையானவை பிற நூல்களில் வரின், அவற்றைத் தேடித் தொகுத்துள்ளார். பிற நூல்களன்றி, அதே நூலில், ஓரிடத்து இடம் பெறும் சொல், தொடர் முதலியன பிறவிடங்களில் எங்கெங்கே வந்துள்ளன என்பதையும் இங்குக்

குறித்துள்ளார். மொத்தத்தில் இங்குத் 'தமிழ்க்கடல்' ஓர் ஒப்புமை மேற்கோள் அகராதியாகத் திகழ்ந்துள்ளார் என்பது மிகையன்று.

## மூல நூலின் சொல், தொடர், அடி முதலான பிறநூல்களில் வருவன

இங்கு " வண்ணக் கிளிமொழியார் எல்லோரும் வந்தாரோ" என்பதை ஒப்ப, "எல்லோரும் போந்தாரோ' போந்தார், போந்து எண்ணிக் கொள்" என்று திருப்பாவை கூறுகிறது.

இப்பாடலில் மணிவாசகனார் "கண்ணுக்கு இனியானை" என்பது போல, ஆண்டாள் பன்னிரண்டாவது பாசுரத்தில், "மனத்துக்கு இனியானை" என்று கூறுகிறார். (திருவெம்:4).

"ஏலக் குழலீ! என்பது போல "சுந்தம் கமழும் குழலீ" என்பார் ஆண்டாள் நாச்சியார். (திருவெம்:5)

*எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்*
*நங்காய்! எழுந்திராய்! நாணாதாய்! நாஉடையாய்*

என்ற திருப்பாவை வரிகள்,

*மானே! நீ நென்னலை நாளைவந்து உங்களை*
*நானே எழுப்புவன் என்றலும் நாணாமே*
*போன திசைபகராய்*

என்ற இத் திருவெம்பாவை வரிகளோடு ஒப்பன. (திருவெம்:6).

"கோழி சிலம்பச் சிலம்பும் குருகு எங்கும்" என்பதோடு,

*வந்து எங்கும் கோழி*
*அழைத்தன இரண் மாதவிப்*
*பந்தல்மேல் பல்கால்*
*குயில் இனங்கள் கூவினகாண்*

என்ற ஆண்டாள் பாட்டு ஒக்கும். (திருவெம்:8).

மேகம் கடலைக் குடித்துக் கடலைச் சுருங்கச் செய்கிறது என்ற கொள்கையைத் திருவள்ளுவர்,

*நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி*
*தான்நல்கா தாகி விடின்*

என்ற குறளால் கூறுகிறார்.

இதனை,

கடல்நின்ற படுத்தநீர் கல்கறை படஎறிந்து

என்று பரிபாடல் கூறும். (திருவெம்:16).

இங்கு "கொங்கு உண் கருங்குழலி! என்பதும் திருப்பாவையில் "கந்தம் கமழும் குழலீ!" என்பதும் ஒக்கும். (திருவெம்:17).

மாணிக்கவாசகர், கடைசிப் பாட்டில் "மார்கழி நீர் ஆடேல் ஓர் எம்பாவாய்" என முடிக்கின்றார். ஆண்டாள், முதற்பாட்டில், "மார்கழித் திங்கள்" என்று தொடங்குகின்றார். (திருப்:1)

"வையத்து வாழ்வீர்காள்" என்று கூறுங்கால், "வையத்து வாழ்வாங்கு வாழ்பவன்" என்ற குறட்பகுதி ஆண்டாள் மனத்தில் தோன்றியிருத்தல் வேண்டும். (திருப்:2).

இங்கு ஆண்டாள், திருமால் "ஊழி முதல்வன்" என்று உரைக்கின்றார். அங்கு மணிவாசகர், சிவன் "ஊழி முதல்வன்" எனக் கூறினார். "மார்கழி நீர் ஆட மகிழ்ந்தேல் ஓர் எம்பாவாய்" என்பது திருப்பாவை. "போற்றியாம் மார்கழிநீர் ஆடேல் ஓர் எம்பாவாய்" என்பது திருவெம்பாவை.

இந்த நாச்சியாரின் நான்காவது திருப்பாவையும், அடிகளின் "முன் இக்கடலைச் சுருக்கி" என்ற பதினாறாம் திருவெம்பாவையும் ஒத்த கருத்துடையன. இரண்டும் மழை வேண்டும் பாடல்கள். இது சைவ மழைப்பாட்டு. இது வைணவ மழைப் பாட்டு. (திருப்:4).

ஒவ்வொருவரும் பல பசுக்கூட்டங்களை உடையவராக இருந்தனர் என்று தெரிகின்றது. "பல் ஆன் கோவலர் இல்லம்" என்று சிலப்பதிகார ஆசிரியர் கூறுவது இங்குப் பொருந்துவது. (திருப்:11).

இப்பாடல் "மானே நீ நென்னலை" என்ற ஆறாவது திருவெம்பாவையோடு ஒப்பது. (திருப்:14).

இங்கு, "பந்தார் விரலி" என்றபடி "பந்தனை விரலாள்" என்று திருவாசகம் கூறும். (திருப்:18).

முப்பத்து முக்கோடி தேவர்க்கும், கோடிக்கு ஒருவர் வீதம் முப்பத்து மூன்று பேர் தலைவர். இங்கே அத்தலைவர்களே "முப்பத்து மூவர் அமரர்" என்று கூறப்படுவதாகக் கொள்ள வேண்டும். "மூவரும்

முப்பத்து மூவரும் மற்றொழிந்த தேவரும்" என்ற திருவாசகம் இதனை வலியுறுத்தும். (திருப்:20).

"தோற்றச் சுடர் அனையாய்!" என்ற திருவாசகச் சிவ புராணம் "தோற்றமாய் நின்ற சுடரே" என்பதோடு ஒக்கும். (திருப்:21).

பூவைப்பூ, காயாம்பூ. அப்பூவின் நிறம் நீலம். பூவை என்று நாகணவாய்ப்புள் (மைனா) என்ற ஒரு பறவைக்கும் பெயர் உண்டு. இரண்டு பூவைக்கும் உள்ள வேறுபாட்டைப் பிரித்துக் காட்ட, சிறந்த நூலாகிய அழகர் கலம்பகம் இயற்றிய ஆசிரியர் காயாம் பூவைச் சொல்லும் போது "மணம் கமழ் பூவை" என்பார். வாசனை வீசுகின்ற பூவை எனவே, அப்பூவை பறவையன்று, காயாம் பூவே என்பது புலனாகிறது. சங்க இலக்கியமாகிய பரிபாடலில் காயாவைக் குறிக்குங்கால் "பறவாப்பூவை" எனக் கூறப்படுகிறது. பறக்கும் பூவை நாகணவாய்ப்புள். இங்கும் "பூவைப் பூ" எனக் காயாம் பூவே உணர்த்தப்பட்டது. (திருப்:23).

இத்திருப்பாவைக் கருத்து, "முன்னைப் பழம் பொருட்கும்" என்ற திருவெம்பாவைக் கருத்தோடும் "உங்கையிற் பிள்ளை" என்ற திருவெம்பாவைக் கருத்தோடும் ஒருவாறு ஒத்தது. (திருப்:29).

காக அறிவு: காக்கையைப் போல இனத்தை அழைத்து உண்ணும் அறிவு. "காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்" என்றார் தாயுமானப் பெரியார். (கூளப்ப:14).

குழந்தைகட்குக் கன்னத்தின்மீது ஒரு கறுப்புப்புள்ளி வைப்பது அழகை மேலும் எடுத்துக் காட்ட. இதனை "வன்னப் புதுமதியில் வந்த களங் கம்போலே, கன்னத்தின் ஊடே கறுப்பிட்டாள்" என்றார் சேதுபதி விறலிவிடு தூதுடையாரும். (கூளப்ப:175).

"ஏது பதி? எது பெயர் யாவர் உறவு?" என்ற கவிச்சக்கரவர்த்தி வாக்கை இக்கண்ணி ஒக்கும். (கூளப்ப:440).

"பெண்ணுக்குப் பெண் இச்சை கொள்ள வந்த பெண் அமுது" என்பது, "கண் பிறபொருளிற் செல்லா கருத்தெனின் அஃதே கண்ட பெண்பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறருக்கு" என்று சீதையைக் கண்டு சொல்லும் சூர்ப்பணகையின் கூற்றை நினைப்பூட்டுகிறது. (கூளப்ப:446).

பிடிப்பு விடாமல்: இட்டு நீங்காமல், "கவவுக்கை நெகிழாமல்" என்றார் இளங்கோ அடிகள். "சேர்த்தியகை நெகிழாமல் சேர்ந்து, சேர்ந்து" என்றுரைத்தார் பாரதம் பாடிய வில்லிபுத்தூரார். "வளி: இடை போழப் படாஅ முயக்கு" என்று இயம்பினார் புலவர். வளி: காற்று. காற்றுக்குக்கூட இடையே புகுந்து பிரிக்க முடியாத சேர்க்கை. (கூளப்ப:512).

பாய்மரத்தில் அகப்பட்ட காகமானேன்; கடலில் கப்பலின் பாய்மரத்தில் அகப்பட்ட காகத்துக்கு வேறு புகல் இடம் இல்லை, "எங்கும் போய்க் கரைகாணாது ஏறி கடல்வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே" என்றார் குலசேகர ஆழ்வார். (கூளப்ப:601).

மான் என்பது இங்கு பெண்மானைக் குறிக்கிறது. கலை: ஆண்மான், "மயிலும் பெடையும் உடன் திரிய மானும் கலையும் மருவிவர" என்கின்றார் கம்பர். (கூளப்ப:657).

"சிலம்பு எச்சரிக்கை என்னும் இடை" என்பது "உபயதனம் அசையில் ஒடியும் இடை நடையை ஒழியும் ஒழியும் என ஒண் சிலம்பு அபயம் அபயம் என அலற நடைபயிலும் அரிவையீர் கடைகள் திறமினோ" என்ற கலிங்கத்துப்பரணிப் பாட்டோடு ஒக்கும். (கூளப்ப: 725).

"ஓது மறை மந்திர நூல் வரியால் மதுவாய் ரசங்கொள்ள" என்பது "ஆரண வாயினர் மாடு ஆடு கோழி அடித்து அவித்துப் பாரணம் செய்யப் பழகிக் கொண்டார் மது பானத்திலும் பூரணர் ஆயினர்" என்ற அறிஞர் வேதநாயகம் பிள்ளையின் பாட்டோடு ஒருவாறு பொருந்துவது. (கூளப்ப:923).

உண்டில்லை என்னும் உரைக்கு இசைந்து; சிலர் இடை உண்டு என்று உரைக்கின்றார்; வேறு சிலர் இடையே இல்லை என இயம்புகின்றார். இரண்டு உரைக்கும் இசைவாக இருக்கின்றது இடை "பல்லியல் நெறியிற் பார்க்கும் பரம்பொருள் என்னயார்க்கும், இல்லை உண்டு என்ன நின்ற இடையினுக்கு இடுக்கண் செய்தார்" எனப் பேசுகின்றார் கவிச் சக்கரவர்த்தி. (வருண:65).

கிஞ்சுகம்; முள்முருக்கம்பூ. இது சிவப்பு நிறமுடையது. "இஞ்சுகவாய் அஞ்சுகமே" என்பது திருவாசகம். (வருண:121).

குமிழ்; மூக்குக்கு இணையான ஒரு பூ. அது நல்ல நிறம் உடையது என்று தெரிகிறது. குமிழ் போல் நிறம் படைத்தால் என்பது

அதனைக் காட்டுகிறது. "குரு வளர் பூங்குமிழ்" என்றார் திருக்கோவையார் ஆசிரியர். எள்: எட் பூ. எட்பூ ஏசிய நாசியாய்" என்பது மனோன்மணீயம். (வருண:133).

மா வடு வகிர், கண்ணுக்கு உபமானம். "மா வடு வகிரன்ன கண்ணி பங்கா" என்றார் மாணிக்கவாசகனார். (வருண:46).

இந்திர நீலம்: நல்ல நீல நிறம். "இந்திர நீலம் ஒத்து இருண்ட குஞ்சியும்" என்கின்றார் கம்பர். (வருண:64).

கூந்தலிலேயே செந்தாமரைப் பூக்களைச் சூட்டினால் கருநிறமான மாயவனார் நிறம் போன்ற குழலிலே சூட்டிய அப்பூக்கள், அத்திருமாலின் கண், கால், முகம், வாய், கை போலச் சிவப்பாகக் காணப்படும். "கண்ணும் திருவடியும் கையும் திருவாயும் செய்ய கரியவனை" என்பது சிலப்பதிகாரம். "கை வண்ணம் தாமரை வாய் கமலம் போலும் கண்ணினைகள் அரவிந்தம் அடியும் அஃதே" என்பது திருமங்கை மன்னர் திருமொழி. (வருண:170).

மலர்களையும் மன்மதன் அம்புப் பூக்களையும் அள்ளிச் செருகும் கூந்தலையுடையாள். "முருகிற் சிவந்த கழுநீரும் முதிரா இளைஞர் ஆருயிரும், திருகிச் செருகும் குழல் மடவீர் செம்பொற் கபாடந் திறமினோ? என்ற கலிங்கத்துப்பரணிச் செய்யுள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. (வருண:172).

"வாவி உறை நீரும் வடநிழலும், பாவகமும், ஏ அனைய கண்ணார் இன் முலையும் - ஓவியமே மென் சீதகாலத்து வெம்மை தரும் வெம்மைதனில் இன்பாரும் சீதளமாமே" என்ற வெண்பா இங்கு நினைக்கத்தக்கது. (வருண:82).

தோகை முருந்து: மயில் இறகின் அடிப்பக்கம். இது துய்ய வெண்மை நிறமாக இருக்கும் இது பல்லுக்கு ஒப்பு. "முருந்து உறழ் முதலார்" என்பது நைடதம். (வருண:120).

ஈகை: கொடை. வதுவை: மணம். ஜெயம்: வெற்றி இம்மூன்றினையும் முழக்கும் முரசுடையவன். "வண்மை என்றும், தோன்றிவரு வெற்றி என்றும் சூடிய கல்யாண மென்றும், மூன்றாய் முழங்கும் முரசினான்". என்று சேதுபதி விறலி விடு தூதிற் கூறப்படுவது இதனோடு பொருந்துவது. (வருண:262).

"காமம் உழந்து வருந்தினார்க் கேமம், மடலல்ல தில்லை வலி" என்பது குறள். காமத்தினால் தாக்கப்பட்டுத் துன்பம் எய்தினார்க்கு மடல் ஊர்தல் தவிர வேறு வலி இல்லை. (வருண:455).

"நம்பர் அடியவர்க்கு நல்லகரத் திரவியங்கள் பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்" என்ற வரிகள் இக்கண்ணியோடு பொருந்துவன. (சேதுபதி:24)

கல்லார் இறுமாப்புக் கொள்ளுதலை "கரையமை கல்வி சாலாக் கவிஞர் போல் இறுமாந்து" என்றார் பிறர். (சேதுபதி:83).

"மாமறை நூல் பொய்த்தாலும் வாரிதி நீர் பொய்த்தாலும், சோமாவி பொய்த்தாலும் சொன்ன மொழி பொய்யாதான்" என்ற பிறர் கண்ணி இதனோடு ஒத்தது. (சேதுபதி:90).

பாய்மரத்துக் காகம் போல் சுற்றுவர்; கப்பல் பாய் மரத்தில் சுற்றுவதைத் தவிர நடுக்கடலில் அகப்பட்ட காகத்துக்கு வேறு கதியில்லை; அப்படிச் சுற்றுகின்றார் மோகன முத்தை ஆடவர். கடல் வாய்த் தத்தளிக்கும் பறவையின் நிலையை "எங்கும் போய்க் கரை காணாது எறிகடல்வாய் மீண்டேயும், வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே" என்று சித்திரிக்கின்றார் குலசேகர ஆழ்வார். (சேதுபதி:24).

ஞானியையனும் அவதானி ஐயனும் சுப்ரதீபக்கவிராயர் பாடிய "கூளப்ப நாயக்கன் விறலிவிடு தூது" என்னும் நூலில் வருகின்றனர். ஞானியையன் புத்திமதியைக் கேளாமல் அஷ்டாவதானி மதுரை நகர் சென்று சொக்கேசர் கோவில் தாசியாகிய மதனாபிஷேகத்தின் மையலில் பட்டுக் கெட்டகதை உமக்குத் தெரியுமே எனச் சோடசவதானிக்கு வேதமய்யர் விளம்புகின்றார். (சேதுபதி:479).

உடையில் நாடிய செவ்வேள்: உடையில் அடங்கிய ஆயுதத்தையுடைய செவ்வேள். "உறை, நிறுத்திய வாளினால் பகையிருள் ஒதுக்கி" என்றார் பரஞ்சோதி முனிவர். (சேதுபதி:747).

கயவர்க்கு - எழுநூறு நன்றி செய்து ஒன்று தீதாயின் எழுநூறும் தீதாய் விடும்" என்பது நாலடியாரிலுள்ள ஒரு வெண்பாவின் பிற்பகுதி. இங்கே அது நன்கு ஆளப்பட்டிருக்கிறது. (சேதுபதி:856-7).

"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" என்பது மூதுரை. (சேதுபதி:1007).

வள்ள முலைப்பால் உண்ட பிள்ளை. கிண்ணத்திலே முலைப்பால் குடித்த ஞான சம்பந்தப் பிள்ளை. "வார் இணங்கு

திருமுலைப்பால் வள்ளத்துக் கறந்தருளி" எனவும், "அம்பிகை செம்பொற் கிண்ணத்து அமுத ஞானம் கொடுப்ப அழுகை தீர்ந்த செம்பவளவாய்ப் பிள்ளை" எனவும் சேக்கிழாரடிகள் செப்புகிறார். (சேதுபதி:1107-8).

மாதவன் கைகாட்டு முனம் சிந்து அரசைக் கைக் கணையால் வென்று புகழ் நாட்டியவன் விஜயன். ''உடற்றுக என்று, திண்சயங்கொள் விஜயனுக்குச் சிந்துபதி தனைக் காட்டித் திருமால் சொன்னான்'' என்று இயம்புகின்றார் வில்லிப்புத்தூரார். (சேதுபதி:1206-7).

## மூலநூல் சொல், தொடர், அடி முதலான பின்னும் வரல்

"முன் இக் கடலை" என்ற இப்பாசுரத்தைப் பெரிதும் ஒப்பது, ஆண்டாளின்,

"ஆழி மழைக் கண்ணா" என்ற நான்காம் திருப்பாவைப் பாசுரம். அது இந்நூலின் பிற்பகுதியாக அமைந்திருக்கிறது. இரண்டின் ஒற்றுமையையும் ஆண்டுக்கண்டு மகிழ்க. (திருவெம்:16).

இப்பாட்டின் கடைசி அடி திருவெம்பாவை பதின்மூன்றாம் பாட்டிலும் அப்படியே ஆளப்பட்டிருக்கின்றது. (திருவெம்:17).

"முன்னைப் பழம் பொருட்கும்" என்ற ஒன்பதாவது பாடல் கருத்து இப்பாட்டின் கருத்தோடு ஒத்தது. (திருவெம்:19).

திருவெம்பாவை முதற்பாட்டு 'ஆதியும் அந்தமும்" என்று தொடங்குகிறது. திருவெம்பாவைக் கடைசிப் பாட்டு "ஆதியாம் பாதமலர்" என்றும், 'அந்தமாம் செந்தளிர்கள்" எனவும் முடிகிறது. (திருவெம்:20).

"புள்ளும் சிலம்பினகாண்" என்ற இதே சொல் - தொடர், திருப்பாவை ஆறாம் பாட்டிலும் அப்படியே இருக்கின்றது. (திருப்:13).

முன் திருவரங்கத்திலிருந்து திருச்சிராப்பள்ளிக்கு இன்பரச வல்லியிடம் போய்க் காவிரியில் உத்தரியம் போக்கடித்தது போலத் தூவு திரைவையையிலோர் சோமன் மறந்தார் அவதானியார். "ஓரிடத்தில் ஏறினார் உத்தரியம் போக்கடித்தார் நாடிச் சிரகிரியை நண்ணினார்" என்பது அந்நூலின் கககஎ-ம் கண்ணி. (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது ஐநூற்று தொண்ணூற்று ஆறாவது வரி அடிக்குறிப்பு). இங்ஙனம் 'தமிழ்க்கடல்' ராய.சொக்கலிங்கம் அவர்கள்

தரும் ஒப்புமை மேற்கோள், நூல் கல்விக்கு உற்ற துணையாக அமைவதோடு, மேற்கோள் ஆராய்ச்சிக்குச் சிறந்த வழிகாட்டியாகவும் அமைந்துள்ளது.

## புராணப் பொழிவுரைத்தல்

பண்டை இதிகாச, புராணக் கதைக் குறிப்புகளையும், கதை மாந்தர்களையும் தம் குறிப்புரையில் ஆங்காங்கே சுட்டி விளக்கமும் தந்துள்ளார். தமிழ்க்கடல் அடிக்குறிப்பில் இடம் பெற்ற சில புராண, இதிகாசச் செய்திகள் வருமாறு:

தென் தமிழைப் பன்னு கும்பன் தென் தமிழைச் சொல்லுகின்ற கும்பமுனி - அகத்தியன். இப் பூமி பாரத்துக் காயிருக்க: இறைவன் திருமணத்தில் வடபால் பூமி கூட்டந் தாங்காமல் தாழ்ந்து போக, அதனை ஈடுசெய்வதற்கு அகத்தியன் தெற்கே பொதிகை போந்திருந்தான் என்பது கதை. *(சேதுபதி:58-9).*

நேமி தொட்டு மாலை அழைத்து ஓர் சிந்து மன்னவனை வென்ற திருமாலை நிகராக முகவைக்குள் வந்தோன்; சக்கரத்தைத் தொடுத்து மாலைப்பொழுதை வரவழைத்து ஒப்பற்ற சிந்து நாட்டு அரசனாகிய சயத்திரதனை வெற்றி கொண்ட கண்ணபிரானுக்குச் சமமாக முகவாபுரிக்குள் வந்து தோன்றிய சேதுபதி. "பாராழி அவலம் அறப்பாண்டவர்தம் இடர் தீரப் பார்த்தன் வாழப் பேராழி அறிதுயிலும் பெருமிதமும் உடன் மறந்து பிறந்த மாயோன், ஓர் ஆழி எழுபரித் தேர் உடையானை மாயையினால் ஒலிக்கத் தன் கைக், கூர் ஆழி பணித்"து, இருள் சூழச் செய்து சிந்துபதியை அர்ச்சுனனால் கொல்வித்தது மகாபாரதக் கதை *(சேதுபதி:1021-2).*

பொன்னனையாள், திருவிளையாடற் புராணத்தில் வரும் ஓர் தாசி. *(கூளப்ப:303).*

கதை: திருப்புவனத்தில் பொன்னனையாள் என்னும் தாசிக்காகக் கடவுள் ரசவாதம் செய்து பித்தளையைப் பொன் ஆக்கிய திருவிளையாடற் கதை. *(கூளப்ப:305).*

தடாதகைப் பிராட்டியின் தாயாகிய காஞ்சனமாலை கடலாடக் கருதியமை காரணமாகத் தடாதகைக்குக் கணவனாக வாய்த்த சோம சுந்தரக் கடவுள், கடலேழும் ஒருங்கே திரண்டு மதுரைக்கே வருமாறு அழைத்தார் என்பது திருவிளையாடற் கதை. (கூளப்ப நாயக்கன் விறலி விடு தூது முந்நூற்று தொண்ணூற்று

நான்காவது வரி அடிக்குறிப்பு). இங்ஙனம் மூலநூல் கருத்து விளக்கத்திற்குப் பல புராண, இதிகாசத்தின் கதைக் கூறுகளைத் துணைக்கொண்டுள்ளார் 'தமிழ்க்கடல்'.

## ஒன்றிற்கு மேற்பட்ட பொருள் தரல்

அங்கம் - அழகு, உடம்பின் உறுப்பு

குருகு - பறவை, வளையல், குருக்கத்திமலர்

அரவம் - ஓசை, பாம்பு (திருவெம்:13)

வடு - மாவடு, குற்றம் (சேதுபதி:4).

கண்டி - கண்டிப்பாக, மார்பில்அணியும் ஓர் ஆபரணம் (சேதுபதி:283).

நெழி - வளைந்து கொடு, ஒரு நகை (சேதுபதி:284).

வெகுமதி - நிறைந்த புத்தி, சன்மானம் (சேதுபதி:412).

மருங்கு - இடை, இடம் (சேதுபதி:608).

முக்காலி - மூன்று காலுடைய ஒரு பீடம், இரண்டு காலோடு கம்பை மூன்றாவது காலாகக் கொண்ட கிழவி. (சேதுபதி:837).

ஒரு கோடி - கோடி பொன், ஒரேயொரு கோடியாடை (சேதுபதி:922).

## அருஞ்சொற்பொருள் தரல்

தடிந்து - சுருக்கி (திருவெம்:16)

சிறு வீடு - இளமேய்ச்சல் (திருப்:8).

கறவை - பசு
கணம் - கூட்டம் (திருப்:11)

தோகை முருந்து - மயில் இறகின் அடிப்பக்கம் (வருண:27).

ஈகை - கொடை
வதுவை - மணம் (வருண:262).

அஞ்சனம் - மை (சேதுபதி:24)

வேலை - கடல் (கூளப்ப:2).

தத்தை - கிளி (கூளப்ப:4).

அம்பகம் - கண் (கூளப்ப:12).

ஓரி - நரி (கூளப்ப:25).

பணி - நகை (கூளப்ப:49).

ஓங்கல் - மலை (கூளப்ப:44).

கலி - பாடம்

பக்கறை - துணி

இடால் - கொடி (கூளப்ப:49).

ஒன்னார் - பகைவர் (கூளப்ப:54).

மருவலர் - எதிரிகள் (கூளப்ப:60).

மறுமண்டலிகர் - வேற்றரசர் (கூளப்ப:68).

கமடம் - ஆமை (கூளப்ப:81).

அரிவை - இருபது வயது முதல் இருபத்தைந்து வயதுக்கு உட்பட்ட பெண்.

தெரிவை - இருபத்தாறு வயது தொட்டு முப்பத்தொரு வயதுக்குட்பட்ட நங்கை (கூளப்ப:157).

வங்கம் - கப்பல்
கூம்பு - பாய்மரம் (கூளப்ப:601).

சன்னை - குறிப்பு (கூளப்ப:761).

## வடசொற்களுக்குத் தமிழில் பொருள்

ஜெயதரன் - வெற்றியையே அணிபவன் (கூளப்ப:26).

தானபரன் - கொடையையே தாங்கியவன் (கூளப்ப:33).

பிரளயப்ரவாகம் - ஊழிக்காலப் பெருக்கு (கூளப்ப:78).

ஆஸ்தி - சொத்து (கூளப்ப:382).

புஷ்பாஞ்சலி - பூத்தூவி வணங்கல் (கூளப்ப:410).

அங்காரம் - கடுஞ்சினம் (கூளப்ப:774).

கோடி ஜெயம் - ஏராளமான வெற்றி (கூளப்ப:1050).

துவஜம் - கொடி (கூளப்ப:1135).

புஜம் - தோள் (வருண:279).

வடசொற்களுக்குத் தமிழில் பொருள் விளக்கம் தரும் நிலை மிகக் குறைவே. காரணம் மூல நூலில் வடசொல் ஆட்சி குறைவு.

## தமிழ்ச் சொற்களுக்கு வட சொற் பொருள்

பன்றிமலை - வராககிரி (கூளப்ப:36).

முழுமதி - பூரணச்சந்திரன் (கூளப்ப:68).

அறம் - தர்மம் (கூளப்ப:956).

இங்ஙனம் சில அமையும். இவ் வடமொழிப் பொருள் தேவை தானா? என்றும், இதுபோல் உரை அமைத்தலைத் தவிர்த்திருக்கலாம் என்றும் எண்ணத் தோன்றுகிறது.

## இடவியல் விளக்கம்

மூல நூலில் இடம்பெறும் ஆறு, மலை, ஊர் முதலான பற்றிய இடவியல் சிந்தனையும் தமிழ்க்கடல் குறிப்புரையில் காணப்படும் சிறப்புக் கூறுகளில் ஒன்றாகும். மூலநூலில் இடம்பெற்ற இவ்விடப் பெயர்கள், இப்போது என்ன பெயரில் வழங்கி வருகின்றன. அவை எங்கே, எந்த இடத்தில் இருக்கின்றன என்ற விவரத்தையும் குறிக்கத் தவறவில்லை.

குடவநதி: ஆற்றின் பெயர். (கூளப்ப:37).

வெள்ளை நாவல் பழுக்கும் மிக்க பதி: ஜம்பு கேஸ்வரம் என்னும் திருவானைக்கோவில்.

நரிகள் துள்ளுபரியான தொல்நகர்: மதுரை மாநகரம். (கூளப்ப:123).

தமிழ் பாடக்கதவு திறந்த ஊர்: மறைக்காடு என்னும் வேதாரணியம்.

கருங்கல் கப்பலாக நாவுக்கரசர் மிதந்து வந்த கடற்பதி: திருப்பாதிரிப்புலியூர். (கூளப்ப:123-4).

*மாமாங்க நீர் பொங்கும் வளம் மல்கிய பதி: திருக்குடந்தை என்னும் கும்பகோணம். (கூளப்ப:125).*

*அங்கத்தை மங்கை வடிவு ஆக்கின ஊர்: திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண் ஆக்கிய சென்னையின் ஒரு பகுதியாகிய திருமயிலாபுரி.*

*தமிழ்க்குத் தங்கத்தைத்தந்த ஒப்பற்ற ஊர்: சுந்தரமூர்த்தி சுவாமிகள் தமிழ்ப்பாடலுக்குத் தங்கம் கொடுத்த ஊராகிய விருத்தாசலம் என்னும் முதுகுன்று. (கூளப்ப:126).*

*கனல் வீசும் மாமலை: திருவண்ணாமலை. (கூளப்ப:127).*

*ஒண்கிரி: திருக்கழுக்குன்றம். (கூளப்ப:127).*

*மூதூர், சுந்தரமூர்த்திகள் முதலையுண்ட பிள்ளையை அழைத்த அவிநாசி என்னும் ஊர். (கூளப்ப:128).*

*பழம்பதி: சீராளனை அறுத்துக் கடவுளுக்கு உணவு சமைத்த சிறுத்தொண்டன் வாழ்ந்த செங்காட்டங்குடி. (கூளப்ப:30).*

*அம்பலம்: சிதம்பரம் (கூளப்ப:30).*

*கற்பதி: கடவுளுக்குக் கண் கொடுத்த கண்ணப்பர் திருக்காளத்தி. (கூளப்ப:132).*

*இறந்தவர் காதில் கடவுள் உபதேசம் சொல்லும் பதி: காசிநகர். சீதரன் மாயாபுரி, அரித்துவாரம். (கூளப்ப:134).*

*கங்கா சாகரம்: கங்கை கடலோடு கலக்கும் இடம். (கூளப்ப:135).*

*மநுக்கோடி சூழ் செந்தூர்: மக்கள் கோடிக்கணக்கில் கூடுகின்ற திருச்செந்தூர். (கூளப்ப:137).*

*திருப்பதிகள் ஒன்பது: திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஆழ்வார்கள் பாடிய ஒன்பது வைணவத் தலங்கள். (கூளப்ப:138).*

*தருப்பொலியும் குற்றாலம்: மாவளம் மல்கிய குற்றாலப்பதி. (கூளப்ப:138-9).*

*ஒற்றியூர்: திருவொற்றியூர் (கூளப்ப:145).*

*ஏழு கடல்: மதுரை நகரிலுள்ள ஒரு தீர்த்தம். (கூளப்ப:394).*

கொல்லம்: மலையாளத்திலுள்ள ஓர் ஊர். (கூளப்ப:1053).

திரு ஆடானை: திருவாடானை என்னும் பாடல் பெற்ற பாண்டிநாட்டுப் பதினான்கு ஊர்களுள் ஒரு ஊர். (சேதுபதி:179-80).

உத்திரகோசமங்கை: திருவாசகம் அருளிய மணிவாசகனாரால், "மாதாளும்பாகத்தன் வாழ்பதி", "பத்தரெலாம் பார்மேல் சிவபுரிபோல் கொண்டாடும் உத்தரகோசமங்கை ஊர்" என்று பெரிதும் பாராட்டப் பெற்ற இராமனாதபுரத்துக்குச் சமீபத்திலேயுள்ள, சேது மன்னர்களால் சிறப்பாகக் கொண்டாடப்படும் ஓர் ஊர். (சேதுபதி:193).

வியன்நகர்: காளையார் கோவில் என்று வழங்கப்பெறும் கானப்பேரூர். அவ்வூரில் பாண்டியனுக்காகப் பொய்ப் பிள்ளையாக இருந்த பொற்பிள்ளை மெய்ப்பிள்ளையானதாகக் கூறப்படுகிறது. (சேதுபதி:217).

இரணியன் செய்துன்பம் தவிர்க்கத் தேவர் கூடி ஆலோசித்த ஊர்: நூற்றெட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகிய திருக்கோஷ்டியூர் என்பர். (சேதுபதி:218).

பொன்னனையாள் என்னும் தாசியின் பொருட்டுக் கடவுள் ரசவாதம் செய்ததாகக் கூறப்படும் திருப்புவனம் என்க. (சேதுபதி :219).

வச்ரபாணி: தேவேந்திரன். அவன் பெற்ற வேழம், தெய்வயானை யென்னும் அணங்கி; அந்நங்கையை வேல் பெருமானாகிய முருகன் மணம் புணர்ந்த பதி, திருப்பரங்குன்றம் என்பர். (சேதுபதி:220).

பிட்டுக்காய் மண் சுமந்த பேரூர்: மதுரை மாநகரம். (சேதுபதி:221).

பிரமன் அன்னவடிவம் எடுத்துச் சிவபெருமான் முடி காண்பதற்கு மேலே பறக்கவும், திருமால் அடி காண்பதற்குப் பன்றி யுருவாகிப் பூமியைக் கிறவும் காண முடியாமல் பரம சிவனார் நீண்ட இடம் திருவண்ணாமலை யென்று கூறுவர். (சேதுபதி:226).

அந்தமாநகர்: சிதம்பரம் ஆகிய தில்லை மூதூர். (சேதுபதி:227).

வணிகன் பெண்டாட்டியைக் கேட்ட பேரூர், புகார் நகரம் என்னும் காவிரிப்பூம்பட்டினம். (சேதுபதி:228).

இமயமங்கை: பருவதராஜன் மகளாகிய பார்வதி. அவர் முலைப்பாலை உண்டு மேன்மை பெற்ற பிள்ளை, திருஞானசம்பந்தர். அந்நிகழ்ச்சி நடந்த ஊர் சீர்காழி. (சேதுபதி:229).

மாங்கனியை ஈசன் அருளால் அழைத்த பெண்: புனிதவதியார் என்னும் காரைக்காலம்மை. அவர் வாழ்ந்த பெரும்பதி, காரைக்கால். (சேதுபதி:230).

கங்கை அணி நகர்: காசிப்பதி (சேதுபதி:231).

பரம்பை நகர்: பரமக்குடி (சேதுபதி:760).

முகவை நகர்: சேதுகாவலரின் அரசிருக்கைத் தலைநகரம். (சேதுபதி:1100).

ஆரூர்: திருவாரூர் (வருண:242).

அளகாபுரி: குபேரன் ஊர் (வருண:253).

நாகைப்பதி: நாகைப்பட்டினம் என்ற ஊர். (வருண:254).

விடைமருது: திருவிடைமருதூர் (வருண:249).

குடந்தை: கும்பகோணம் (வருண:240).

## இலக்கணக் குறிப்புரைத்தல்

பழைய உரையாசிரியர் மரபில் நின்று, தமிழ்க்கடல் பல இடங்களில் சொற்களுக்கு இலக்கணக் குறிப்புத் தந்து விளக்கியுள்ளார். மூல நூலில் உருபு மயக்கம், உருபுகள் பொருளற்ற நிலையில் வருதல், எச்சங்களும் முற்றும் தம்மில் மாறுபட்டு அமைந்துள்ள போது, பொருள் மயக்கம் ஏற்படாமல் இருக்க, இலக்கணக் குறிப்பைத் தந்துள்ளார்.

திமிதி திந்தி தகுதி தந்த: ஒலிக்குறிப்பு (கூளப்ப:2).

பீரங்கிப் புகை முகிலுக்குச் சுடும் ஒலி உவமை. (கூளப்ப:6)

மாரிமழை: ஒரு பொருள் கொண்ட இரு மொழி. (கூளப்ப:6).

திடுதிடு: ஒலிக்குறிப்பு (கூளப்ப:7).

அளி: அள்ளி என்பதன் இடைக்குறை. (கூளப்ப:161).

வாடை மணம், ஒரு பொருட் சொற்கள் (கூளப்ப:323).

கலின் கலின்: ஒலிக்குறிப்பு (கூளப்ப:432).

பளீர் கலீல்: ஒலிக்குறிப்பு (கூளப்ப:562).

மருந்து: மருத்து என எதுகை நோக்கி வலித்தல் விகாரம் பெற்றது. (கூளப்ப:615).

தத்திரம்: எதுகை நோக்கி தந்திரம் தத்திரமாயிற்று. (கூளப்ப:754).

திரம்: வலி (திறம் என்பது எதுகை நோக்கித் திரிந்தது) (வருண:5).

சக்கரவாகம்: ஒரு பறவை. அப்பறவையைக் கொங்கைக்கு உபமானமாகக் கூறுகிறார் இம்மடல் ஆசிரியர். (வருண:80).

கோங்கரும்பு: கொங்கைக்கு உபமானமாகப் பல இலக்கியங்களிலும் பயின்று வந்திருக்கிறது. (வருண:85).

குமுகுமு: ஒலிக்குறிப்பு (வ்ருண:117).

மால்: கரு விழிக்கு உவமை (வருண:146).

மா வடு வகிர்: கண்ணுக்கு உபமானம். (வருண:146).

துடை: தெப்பத்திற்கு உவமை (வருண:48).

இளைஞர்கள் மதயானையாக உருவகம். துடைகள் அவ்யானைகள் கட்டும் கம்பங்களாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. (வருண:49).

முதல் அரசிலை என்பதை அரசு இல்லை எனக் கொள்க. இரண்டாவது அரசிலை அரசமரத்தின் இலை. அது உபமானத்தில் வந்தது. (வருண:58).

மீமிசை, அதாவது, ஒரு பொருள் இரு சொல் (வருண:62).

**கஎரு** முதல் **கஎகூ** முடிய உள்ள கண்ணிகள் மலைக்கும் கடலுக்கும் சிலேடை. (வருண:175-179).

தந்த தொந்தம்: ஒலிக்குறிப்பு (வருண:189).

**உ0எ** முதல் இதுவரை **(உகஅ)** திருமாலுக்கும் நதிக்கும் சிலேடை (வருண:207-218).

வள்ளை: காதுக்கு உபமானமான ஒரு இலை (வருண:311).

'தொம்' - ஒலிக்குறிப்பு (வருண:313).

நீர்ச்சுழி: நீர்ச் சுழற்சி; இது கொப்பூழுக்கு உவமை. (வருண:339).

தராசு பாட்டுக்கும், பந்து குதிக்கு ஆமை புறங்காலுக்கும் உவமானங்கள் (வருண:341).

வீணை இசை மிஞ்சாமல்: இசையில் இரண்டாம் வேற்றுமை உருபை ஏற்ற வேண்டும். வீணையில் இசையைப் பாட்டு மீறிவிடாமல் என்பது பொருள். (சேதுபதி:12).

ஒள்தொடி : ஒளியுள்ள வளையல். இது ஆகுபெயராக அதனை அணிந்தாளை உணர்த்துகிறது. (சேதுபதி:281).

முந்தி: முந்தானையின் மரூஉ (சேதுபதி:334).

மதமதக்கத் தாழி: இது 'முதுமக்கள் தாழி' என்பதன் மரூஉச் சொல் தொடர். (சேதுப்தி:436).

அருச்சிப்பார்: அருச்சிப்பாரை என்று இரண்டாம் வேற்றுமையாகக் கொள்க. (சேதுபதி:504).

நங்கை, எழுவாய். (சேதுபதி:676).

வேசை, இங்கு. நான்காம் வேற்றுமையில் வந்தது; வேசைக்கு (சேதுபதி:1001).

இப்பாசுரத்தில் முதல் மூன்று அடிகளிலும் சிவபெருமான், தேவி, மடு ஆகிய மூன்றுக்கும் உவமை உரைக்கப் பெறுகிறது. (திருவெம்:13).

கற்று, கன்று என்பதன் விகாரம் (திருப்:11).

இங்ஙனம் தமிழ்க்கடல் உரையாசிரியர் நிலையில் எடுத்துக் காட்டும் அனைத்து இலக்கணக் குறிப்புகளும் பொருள் கோளுக்காக - பொருள் மயக்கத்தை நீக்கவே எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## பொருள் கோள் முறை

மூல நூலின் பொருள் விளக்கத்திற்குச் சொற்களை மாற்றிக் கூட்டுவதும், கொண்டு கூட்டுவதும், வினை முடிவு காட்டுவதும், சொல் வருவித்துப் பொருள் கோடலும் பண்டை உரையாசிரியர் களின் வழக்கம். சொற்களை மாற்றிக் கூட்டுதல், பிரித்து இயைத்தல் முதலான பொருள் கோள் மரபைத் தமிழ்க்கடல் பின்பற்றியுள்ளார்.

*சில சான்றுகள்:*

மனோகர காம விநோத விகார வசீகர என்று பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும். (வருண:98).

முதல் அரசிலை என்பதை அரசு இல்லை எனக்கொள்க. இரண்டாவது அரசிலை அரச மரத்தின் இலை. (வருண:58).

துன்றும் இருள் காம்பு ஓதி தோள்: துன்றும் இருள் ஓதி; காம்பு தோள் என்று கொண்டு கூட்டல் வேண்டும். இது நிரல் நிரை. (சேதுபதி:26-27).

பாமதுரப்பாடி என்பதை மதுரப்பாபாடி என மாற்றுக. (சேதுபதி:234).

முதல் வரியைக் கொழுந்து ஓடி எனப் பிரித்தல் வேண்டும். இரண்டாவது அடி கொழுந்தோடி. (கூளப்ப:8).

காந்தாரக் கொங்கை: காந்து ஆரக் கொங்கை எனப் பிரிக்க. (கூளப்ப:11).

ஆரம் அணி ஆரம் மணி ஆரமணி என்று பிரிக்க. (கூளப்ப:37)

இங்ஙனம் பண்டை உரையாசிரியர்கள் கொண்ட பொருள்கோள் முறையைப் பின்பற்றியுள்ளார் 'தமிழ்க்கடல்' ராய.சொக்கலிங்கம் அவர்கள்.

## உலக வழக்கு முதலான எடுத்துரைத்தல்

உரையாசிரியர்கள் நூற்கண் அமையும் வழக்குச் சொற்களையும் செய்திகளையும் சுட்டிச் செல்வதோடு, ஆங்காங்கே தொடர்புடைய பழமொழிகளையும் சுட்டிச் செல்வதைக் காணலாம். தமிழ்க்கடலும், இவ்வகையில் உலக வழக்கு, பழமொழிகள், சமய மரபுகள் முதலானவற்றை ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளார்.

மேருமலையை ஏடாகவும் தனது தந்தத்தை எழுத்தாணி யாகவும் கொண்டு விநாயகன் பாரதக்கதையை எழுதினன் என்பது தொன்று தொட்ட வழக்கு (கூளப்ப:காப்பு).

சுவாமி தேரில் வருங்கால் முறைத்தாசியும் தேரில் ஏறியிருப்பது மரபு. (கூளப்ப:849).

இப்பாட்டு, திருப்பாவையின் இருபத்தேழாவது பாடலாதலால், மார்கழி மாதங்களில் இருபத்தேழாம் நாள்

திருப்பள்ளி எழுச்சிக் காலத்தில் பெருமாள் கோவில்களில் திவ்யமான அக்கார அடிசில் செய்வதை இன்றும் காணலாம். அன்று செய்யும் சாத்துக்கு "கூடாரை வெல்லும் சீர்ச் சர்க்கரைப் பொங்கல்" என்பது பெயர். (திருப்:27).

முதுமக்கள்: வயதானவர்கள் தாழி. பாத்திரம். வயது பெரிதும் ஏறியவர்களை ஒரு தாழியுள் அடக்கம்செய்து இவ் உலகில் நின்றும் பிரித்துவிடுவது ஓர் பழைய முறை என்று கூறக் கேட்கின்றோம். (சேதுபதி:436).

தரித்த: உண்டான பிள்ளைக்கு உள்ளாவார் வாயில் அள்ளிப் போடுவதை: மதனாபிஷேகத்தின் வலையில் வீழ்வார் வாயிலே அள்ளிப்போடும் மண்ணை, தன் வாயிற் போட்டு அறிந்தார்: தன் வாயிலே போட்டுத் தெரிந்து கொண்டாள். கருவுற்றவர் மண் தின்னும் இயற்கை இவ்வளவு நயமாகக் கூறப்படுகிறது. (கூளப்ப:162)

குழந்தைகட்குக் கன்னத்தின் மீது ஒரு கறுப்புப்புள்ளி வைப்பது அழகை மேலும் எடுத்துக்காட்டும் (கூளப்ப:175).

இவ்வாறு வழக்கு, மரபுகளை இன்றும் காணலாம். ஓர் பழைய முறை, இயற்கை எனப் பொதுநிலையில் உலக வழக்கு கூறப்படும். இப்பல்வேறு வழக்குகள் பற்றிய ஆசிரியரின் சிந்தனை அவரது உலகியலறிவு, சமய நூல் அறிவு முதலானவற்றை வெளிப்படுத்தும்.

## பழமொழி

அத்திப்பூ, அபூர்வமாகவே பூக்கும். அத்தி பூத்தாப்போல என்பது பழமொழி. (வருண:321). இங்குக் குறிக்கப் பெறும் இப்பழமொழி விளக்கத்திற்காக உரையாசிரியரால் தரப்பட்டது. இது அவரின் உலகியல் அறிவிற்குச் சான்றாகும்.

## பிறமொழிச் சொற்களுக்குத் தமிழில் பொருள் தரல்

தமிழ்க்கடல் மூல நூலில் வரும் பிறமொழிச் சொற்களை இனங்கண்டு எடுத்தியம்பியுள்ளார். தாம் உரை எழுதும் நூலிலுள்ள மலேய மொழிச் சொற்களையும், தெலுங்கு மொழிச்சொற்களையும் இனங்கண்டு தமிழில் பொருள் விளக்கம் தந்துள்ளார். இது அவரின் பன்மொழிப் புலமைக்குச் சான்றாக அமையும். இங்ஙனம் அவர் தரும் சில விளக்கங்களாவது:

'கிலா' என்பதற்கு மலாய் மொழியில் கிறுக்கன் என்பது பொருள். இந்நூலாசிரியர்க்கு மலேயா தொடர்பு இருக்கலாம் போலும். (சேதுபதி விறலி விடு தூது எண்ணூற்று எழுபத்து ஏழாவது வரி அடிக்குறிப்பு)

தித்திலோ . . . . . . . போங்குலு: இவை தெலுங்கு வார்த்தைகள். இவை உடைமைகளின் பெயர்களாக இருத்தல் கூடும் எனத் தோன்றுகிறது. (கூளப்ப:369).

நன்னு சொர்ண வெல்லா தக்கொண்டு: இவைகளும் தெலுங்கு மொழிகளே. நன்னு: என்னுடைய, சொர்ண வெல்லா: பொன்னை யெல்லாம். தக்கொண்டு: தான் கவர்ந்து. (கூளப்ப:370).

சுக்கிர வாரம்: வெள்ளிக்கிழமை (சேதுபதி:752).

சங்கராந்தித் தினம்: பொங்கல் நாள் (சேதுபதி:775).

## முடிவுரை

தமிழ்க்கடல் எழுதியுள்ள குறிப்புரை ஆசிரியரின் இலக்கிய, இலக்கண, பிறதுறை அறிவை நன்கு புலப்படுத்தும். பதிப்பாசிரியரே ஓர் உரையாசிரியராகச் சிறப்புற்று விளங்குவதையும் இக்குறிப்புரையில் அவர் தரும் பல்வேறு கருத்துக்கோவைகள் நமக்குத் தெளிவுப்படுத்துகின்றன. குறிப்புரையை மூலத்தின் அடியில் அடிக்குறிப்பாக ஒவ்வொரு பக்கத்தையும் இருபகுதிகளாகப் பிரித்துக் கொண்டு அச்சிட்டார்.

தனக்குத் தெரியாதவற்றை நேர்மையுடன் தெரியாது என ஒப்புக்கொள்ளும் பண்பு கொண்ட தமிழ்க்கடல் தாம் பதிப்பித்த நூல்களை அதற்கு முன் யார் யார் பதிப்பித்துள்ளனர் என்பதைக் குறிப்பிடுவதில்லை.

பிழை அல்லது பொருத்தமற்ற அல்லது மாறுதற்கிடமான பகுதிகள் ஏட்டில் இருப்பின், அதனை மாற்றாது ஏட்டில் உள்ளவாறே தமிழ்க்கடல் ராய.சொக்கலிங்கம் பதிப்பித்துள்ளார்.

நான்கு சிற்றிலக்கிய நூல் முகத்திலும் ஒரு பதிப்பு வரையறை பின்பற்றப்பட்டுள்ளது. அவை வருமாறு: 1. தோற்றுவாய் 2. பாட்டுடைத்தலைவன் வரலாறு 3. நூலாசிரியர் வரலாறு 4. நூல் வரலாறு 5. யாப்பு 6. மொழி 7. கருத்து நயம் 8. இறுவாய் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. இச்செய்திகளைத் தரும் முறையில்

சிற்றிலக்கியங்கள் தோறும் சிறிது மாறுபடினும் உள்ளடக்கம் மாறவில்லை. இங்குத் தமிழ்க்கடலின் ஆராய்ச்சித்திறன், அதில் அவருக்கிருந்த ஆழ்ந்த ஈடுபாடு, பன்னூற் புலமை, நூல் கருத்துகளை அறிமுகம் செய்யும் முறை முதலான பற்றிய கருத்துரைக்கும் முயற்சி அமைகிறது.

### சுருக்க விளக்கம்

கூளப்ப: கூளப்ப நாயக்கன் விறலிவிடுதூது

சேதுபதி: சேதுபதி விறலிவிடுதூது

திருப்: திருப்பாவை

திருவெம்: திருவெம்பாவை

வருண: வருணகுலாதித்தன் மடல்.

# இதழாசிரியர்

லெ.ஆ. உமாமஹேஸ்வரி

காரைக்குடியில் பிறந்த சிறந்த தமிழறிஞரும், தமிழ்க்கடல், சிவம்பெருக்கும் சீலர், சிவமணி என்ற பட்டங்களைப் பெற்றவரும், சென்னையில் தமிழ் எழுத்தாளர் சங்கத்தாரால் கேடயம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றவரும், செட்டிநாட்டில் சிறை சென்ற தேசபக்தருள் முன்னோடியாகத் திகழ்ந்து காந்தியத்தைப் பரப்பியதில் பேரிடம் பெற்றவருமான இராய. சொக்கலிங்கம்[1], விருத்தம், வெண்பா, கலிப்பா, அகவற்பா, கண்ணி, தாண்டகம் போன்ற பல்வகைப் பாக்களையும் பாங்குறக் கையாண்டு தாய்நாட்டுப் பற்றையும், தாய்மொழிப் பற்றையும் தமது சுவை சொட்டும் இலக்கியத்தால் பரப்பியவர். தமிழ் இலக்கிய - பக்திப் பனுவல்கள் படிப்போர்க்கு இடர் தருகின்றன என்று அவற்றைச் சிறிய தொகுப்பு நூல்களாகப் பாமரனும் படிக்கும் வண்ணம் வெளியிட வேண்டும் எனும் கொள்கையில், நயம் சான்ற செய்யுட்களைத் தொகுத்து, நிரல்படுத்தித் தக்க குறிப்பும் எழுதிப் பதிப்பித்துள்ளவர். தொகுப்பு நூல்கள் 27, உரைநடைப் படைப்பு 5, கவிதை நூல்கள் 8, ஆராய்ச்சி நூல்கள் 12, இலக்கிய வெளியீடுகள் 4, திருக்கோயில் வெளியீடுகள் 3 எனப் பல்வேறு இலக்கியப் படைப்புகளுக்கு உரிமையாளரான இவர், இதழ்ப் பணியினையும் விட்டு வைக்கவில்லை. 'ஊழியன்' என்ற மாத இதழை - 20 ஆண்டுகள் நடத்தி, இதழாசிரியர் பணியினைச் செவ்வனே செய்தவர்.[2]

இராய. சொக்கலிங்கத்தின் 'ஊழியன்' இதழ் தோற்றம், 'ஊழியனின் ஐந்து காலகட்டங்கள்' இதழின் முன்னோடி, ஊழியன் இதழில் இடம்பெற்ற செய்திகள் இவற்றின் வழி இராய.சொக்கலிங்கத்தின் இதழாசிரியர் பணியினை ஆய்வதாக இக் கட்டுரை அமைகிறது.

---

1. செட்டி நாடும் செந்தமிழும், சோமலெ., வானதி பதிப்பகம், சென்னை, 1999, பக். 109-210.
2. தமிழ் எழுத்தாளர் யார் - எவர்? தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1996, ப. 115.

## 'ஊழியன்' இதழ் தோற்றமும் அறிமுகமும்

'ஊழியன்' இதழ் 1920 முதல் 1940 வரை காரைக்குடியில் இருந்து வெளிவந்த வார இதழாகும். காரைக்குடியில் 1917இல் தொடங்கப்பட்டு இன்று வரை சிறப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் 'இந்து மதாபிமான சங்கத்தின்' உறுப்பினர்கள் எண்மர் சேர்ந்து 11-9-1919 அன்று 'தனவைசிய ஊழியர் சங்கம்' எனும் அமைப்பினை உருவாக்கினர். இவ் அமைப்பின் சார்பில், அதன் செயலாளராகிய சொ. முருகப்பாவை ஆசிரியராகக் கொண்டு 8-9-1920இல் 'தன வைசிய ஊழியன்' என்ற பெயரில் வார இதழினைத் தொடங்கினர். தொடர்ந்து 13 மாதங்களும், பின்னர் ஒரு மாதமும் இப்பொறுப்பைத் திறம்படச் செய்த சொ. முருகப்பா 7-7-1922 இதழ் வெளியானவுடன் இப்பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார். இடையே சில மாதங்கள் ஆசிரியர் பொறுப்பேற்று இதழை நடத்திய இராய. சொக்கலிங்கம் 14-7-1922இல் இருந்து, 1940இல் இவ்விதழ் நிறுத்தப் பெற்றதுவரையும், இதன் ஆசிரியராக இருந்து சிறப்பாகப் பணியாற்றினார். 21-10-1924இல் இந்த இதழ் தனவைசிய ஊழியர் சங்கத்திற்குத் தொடர்பற்றதாகி, இராய. சொக்கலிங்கத்தால் உருவாக்கப்பெற்ற 'ஊழியன் கம்பெனி' என்ற பொது நிறுவனத்தின் இதழாகத் தொடர்ந்து வெளிவந்தது. 15-4-1930இல் பொருள் இழப்புக் காரணமாக இந்நிறுவனம் மூடப்பட, இராய.சொக்கலிங்கம் இதழ் முழுமையும் தம் உடைமையாக வாங்கிக் கொண்டு தொடர்ந்து நடத்தினார். 21-6-1933இல் பொருள் இழப்பைக் காரணமாக அறிவித்து இராய.சொக்கலிங்கம் இவ்விதழ் வெளியீட்டைச் சிறிது காலம் நிறுத்தி வைத்திருந்தார். 3-1-1936இல் இருந்து மீண்டும் இவ்விதழ் வெளிவந்தது. ஆனால் அச்சிட்டு வெளியிடுபவர் ராம. காசிநாதன் இந்தியா பப்ளிகேஷன்ஸ் லிமிடெட் (India Publication Ltd.) காக என்ற குறிப்போடு இராய. சொக்கலிங்கத்தை ஆசிரியராகக் கொண்டு சென்னையிலிருந்து இதழ் வெளியாயிற்று. 5-5-1938இல் இருந்து மீண்டும் காரைக்குடியில் இருந்து ஆசிரியர், அச்சிட்டு வெளியிடுபவர் எனும் அனைத்துப் பொறுப்புகளையும் இராய. சொக்கலிங்கமே ஏற்க இதழ் வெளிவரலாயிற்று. 18-7-1940இல் இறுதியாக இந்த இதழ் நிறுத்தப்பட்டது.[3]

3. நகரத்தார் கலைக்களஞ்சியம், (பதி) ச. மெய்யப்பன், இ.ஆ.கரு. முத்தப்பா, சபா. அருணாசலம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998, ப. 83.

## ஊழியனின் ஐந்து காலகட்டங்கள்

மேற்குறிப்பிட்ட செய்திகளைக் கொண்டு 'ஊழியன்' இதழின் காலகட்டத்தினை 1. சொ. முருகப்பாவினை ஆசிரியராகக் கொண்ட தன வைசிய ஊழியன் காலம், 2. இராய. சொக்கலிங்கத்தினை ஆசிரியராகக் கொண்ட தன வைசிய ஊழியன் காலம், 3. 'ஊழியன்' எனப் பெயர் மாற்றம் பெற்றபின் காரைக்குடியில் இருந்து வெளிவந்த காலம், 4. ஆசிரியராக மட்டும் இராய. சொக்கலிங்கத்தைக் கொண்டு ராம. காசிநாதன் சென்னையில் இருந்து அச்சிட்ட காலம், 5. ஊழியன் மீண்டும் காரைக்குடியில் இருந்து வெளியான காலகட்டம் என ஐவகையாகப் பகுத்து ஆராய்வதன் மூலம் இவ்விதழ் குறித்த விரிவான செய்திகளைப் பெற இயலும்.

## ஊழியனின் முன்னோடி

தனவைசிய ஊழியன், ஊழியன் இதழின் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளதால், ஊழியன் இதழ் குறித்து ஆராயும் பொழுது, தன வைசிய ஊழியன் குறித்து அறிவதும் இன்றியமையாததாகிறது. இவ் இரண்டு இதழுக்கும் உள்ள வேறுபாட்டினை அறிவதன்வழி, ஊழியன் இதழ் சமுதாயத்திற்கு ஆற்றியுள்ள தொண்டினை வெளிக்கொணர இயலும்.

## தன வைசிய ஊழியன்

ரௌத்ரி ஆண்டு ஆவணித்திங்கள் 24 - (8-9-1920) புதன்கிழமையன்று முதல் இதழான 'தன வைசிய ஊழியன்' வெளியானது. முதல் இதழ் நான்கு பக்கங்களைக் கொண்டதாக, முழுத்தாள் அளவில் (Foolscap) வெளியாகியுள்ளது. முதல் இதழ் புதன்கிழமை வெளி வந்திருந்தாலும், வெள்ளிக் கிழமைதோறும் வெளிவரும் இதழ் எனும் செய்தி முகப்புப் பகுதியில் இடம் பெற்றுள்ளது. இவ்விதழி ஆசிரியர் சொ. முருகப்ப செட்டியார்.

## இதழின் முதல் பக்கம்

இதழின் முகப்புப் பகுதியின் தொடக்கத்தில் பிள்ளையார் சுழியும், சிவமயம் எனும் வாசகமும், இதழின் இடப்புறத்தில் பதிவு எண்ணும், வலப்புறத்தில் 'Dhanavyasia Oolian' என ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பெயரினைக் கொண்டும் திகழ்கிறது. அதே போல் இட வலப்பக்கத்தில் முறையே 'குடி செய்வ லென்னு மொருவர்க்கு' 'ஊழையும் உப்பக்கங் காண்பர்' எனும் குறள்கள் இடம்பெற்றுள்ளன. 'மலர் க', 'இதழ் க' எனத் தமிழ் எண் குறிப்பில், மலர், இதழ் எண்

அடையாளம் காட்டப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கது. இதழின் முதல் பக்கத்தில் முதல் கட்டுரையாக மகிபாலன்பட்டி எம். சின்னையா செட்டியின் 'சமூக ஊழியன்' என்னும் கட்டுரை இதழில் வெளியாகியுள்ளது. இக்கட்டுரை இதழின் நோக்கத்தைத் திறம்பட விளக்கியுள்ளது.[4]

## தன வைசிய ஊழியனில் இடம்பெற்றுள்ள செய்திகள்

தலையங்கப் பகுதி இவ் இதழின் இரண்டாம் பக்கத்தில் இடம் பெற்றுள்ளது. தலையங்கத்திற்கு மேற்பகுதியில் 'வேலும் மயிலும் துணை' எனத் தலைப்பிட்டு, 'நாளென் செயும்' எனும் கந்தரலங்காரப் பாடலும் இடம் பெற்றுள்ளது. முதல் இதழில் 'நமது பத்திரிக்கை' எனும் தலைப்பில் தலையங்கத்தினை எழுதி உள்ள சொ. முருகப்பா, 'நமது பத்திரிக்கை சிறப்பாக நமது சமூக முன்னேற்றத்திற்கும், பொதுவாக இந்தியர்களின் முன்னேற்றத்திற்கும் உழைத்து வரும்' என இதழின் நோக்கத்தினைப் புலப்படுத்தும் வண்ணம் எழுதியுள்ளார். அதுபோலவே இந்த இதழ் தோன்றிய ஓராண்டுக்குள் 60 ஆண்டுகளாகக் கூட்டப்படாமல் இருந்த 96 ஊர் நகரத்தார் கூட்டத்தைக் கோவிலூரில் 15-7-1921இல் கூட்டிய செய்தியினையும், இதழ் மூலம் பல்வேறு சங்கத்தார் இயற்றிய தீர்மானங்களைத் தொடர்ந்து வெளியிட்டுள்ளதையும் கொண்டு, இவ்விதழ் சமூக முன்னேற்றத்திற்குப் பெருந் தொண்டாற்றியுள்ளமை புலனாகும்.

இரண்டாம் இதழ் 17-9-1920 வெள்ளிக்கிழமையன்று எட்டுப் பக்க அளவில் வெளி வந்துள்ளது. பத்திரிக்கை திறப்பு விழா, திறப்பு விழாவிற்கு வருகை தந்த டிப்டி கலெக்டர் ஒய். வி. ஸ்ரீநிவாசையர் பேசிய உரையின் சுருக்கம் ஆகியவை இடம்பெற்றுள்ளன.

இளைஞர் பகுதி (ப-7) தொழிற்பகுதி (கிழங்குப் பயிர் குறித்த செய்தி, ப7, 26-10-1920), (பாலைப் பொடியாக்கும் பக்குவம் 21-1-1921), மாதர் பகுதி (பெண்கல்வி 24-9-1920) ஆகிய செய்திகளும் அரசியல் பகுதியில் இந்திய தேசிய விசேஷ மகாநாடு, லாலா லஜபதியின் அக்ராசனம், காந்தியடிகளின் ஒத்துழையாமை பற்றிய தீர்மானம் போன்ற செய்திகளும் இடம்பெற்றுள்ளன.

இராய.சொக்கலிங்கம் இவ்விதழில் தமது கட்டுரையினை அடிக்கடி எழுதி வந்துள்ளார். முதல் இதழின் மூன்றாம் பக்கத்தில் 'மனிதனும் அவன் கடமையும்' எனும் கட்டுரை

---

4. தன வைசிய ஊழியன், 8-9-1920, ப. 1.

இடம்பெற்றுள்ளது. மற்றும் ஜாதியபிமானம் (1-10-1920), சமூகப்பாக்கள் (ப.5., 26-10-1920), நமது மகாநாடு (ப. 3, 24-4-1921) எனப் பல கட்டுரைகளை இவ்விதழில் தொடர்ந்து எழுதி வந்துள்ளதில் இருந்து இவருக்கு இதழுடனான நெருங்கிய தொடர்பு புலப்படுகின்றது. இவை தவிர, கடைத்தெரு எனும் பகுதி பினாங்கு, இரங்கூன், சென்னையின் தங்கம், வெள்ளி விலையினைக் குறிப்பிடுகிறது, உடல் ஆரோக்கியம் குறித்து இடம்பெறும் சுகாதாரப் பகுதி (நாட்டு வைத்தியம், ப. 7, 15-10-1920), அஞ்சா நெஞ்சனின் நையாண்டிப் பகுதியான நமது பலசரக்குக் கடை போன்ற பகுதிகளும் பொது வர்த்தமானம் எனும் தலைப்பில், சென்னையிலிருந்து மலாய் செல்லும் கப்பல் பற்றிய செய்தி, 'கண்டது' எனும் தலைப்பின் கீழ் உவே.சா. அவர்கள் தலைமையேற்று நடத்திய தமிழ் நிகழ்ச்சி பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. 15-10-1920 முதல் 10 பக்கங்களைக் கொண்டதாக இவ்விதழ் வெளிவந்துள்ளது. இதழின் 2ஆம் பக்கம் சமயப்பகுதி, 3ஆம் பக்கம் அரசியல் பகுதியினைக் கொண்டு விளங்குகிறது.

சித்தர் திருவுளம் (ப.6, 31,12,1920), ஆயுர்வேத வைத்தியம் (4-2-1920) போன்ற நூல்கள் குறித்த புத்தக மதிப்புரை, சென்னை மாகாண ஜனத்தொகை (1-4-1921) போன்ற பொதுவான செய்திகளும் இதழை மிளிரச் செய்கின்றன.

'சமூக இதழ் ஆதலால் மலேயா நாட்டில் நடந்த தனவைசியர்களின் சங்கம் பற்றிய செய்தி (15-10-1920),தன வைசியர்களின் சங்கற்பம் (24-9-1920), வியாபாரப் பகுதி (ப7, 15-10-1920), நாட்டுக் கோட்டையாரின் விவாகமும் சலவைக் கல் சாமான் சீர் முறையும் (12-11-1920) செட்டியார்கள் பெண்களை விற்பது (3-12-1920), நகரத்தார் தீர்மானங்கள், உள்ளிட்ட பல்வேறு சமூக அறிவுரை, சமூகச் சாடல்கள் பற்றிய செய்திகளும் இடம்பெறுகின்றன. தமது சமூகம் பற்றி மட்டும் அன்றிச் சில இதழ்களில் சௌராட்டிர சமூக மக்களைக் குறித்தும் (5-11-1920, ப. 6), செய்திகள் இடம்பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## விளம்பரப் பகுதி

ஓரிதழ் தொடர்ந்து நடைபெறுவதற்கு வேண்டிய ஊட்டத்தை அளிப்பது விளம்பரப் பகுதி எனில் மிகையில்லை. தனவைசிய ஊழியனிலும் பல்வேறு வகையான விளம்பரங்கள் இடம்பெற்றுள்ளன. எனினும், ஓரிதழில், மற்ற இதழ் குறித்த விளம்பரம் வருவது சற்றுப் புதுமையானது. திரு.வி.க.வை ஆசிரியராகக் கொண்ட 'நவசக்தி' (ப.5, 26-10-20) குறித்த விளம்பரம், இந்தியா சட்ட

நிரூபண சங்கத்தில் உறுப்பினராக ஓட்டு கேட்டுப் பிரச்சாரம் செய்த சௌ. சமூகத்தைச் சேர்ந்த எல்.கே. துளசிராமின் தேர்தல் பிரச்சார விளம்பரம் இரண்டும் குறிப்பிடத்தக்கதாகும்.

## சந்தா பகுதி

சந்தா குறித்த தகவலும் தமிழ் எண்ணிலேயே குறிப்பிடப் பட்டுள்ளது. இந்தியா, பர்மா, சிலோன் முதலிய உள்நாட்டு ஆண்டுச் சந்தா ச - 0 - 0 (நான்கு உரூபாய்) சிங்கப்பூர், சைகோன் முதலிய வெளிநாடுகளுக்கு ரு - 0 - 0 (ஐந்து உரூபாய்) அக்காலகட்டத்தில் அனைவரும் தமிழ் எண்களை அறிந்திருந்தனர் என்பதற்குச் சான்றாக இது அமைகிறது.

## இராய. சொக்கலிங்கம் ஆசிரியர் பொறுப்பேற்றல்

7-7-1922இல் வெளிவந்த இதழில் சொ. முருகப்ப செட்டியார் எழுதியுள்ள தலையங்கத்தில் தம் உடல்நிலையின் சீர்கேடு காரணமாக ஊழியன் தொடர்பை நீக்கிக் கொள்வதாகவும், தமது ஆருயிர் நண்பரும், தமது முயற்சிகளில் பெரிதும் உடனிருந்து வேலை செய்து வருபவருமான ஸ்ரீமான் இராய. சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் ஆசிரியர் பொறுப்பை ஏற்று நடத்துவார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார். 14-7-1922 முதல் இதழ் முறைப்படி இராய. சொக்கலிங்கத்தை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ளது. 'எனது வருகை' என்னும் தலையங்கப் பகுதியில் இராய. சொக்கலிங்கம் ஏற்கெனவே தமக்கு இதழுடனான தொடர்பினைச் சுட்டிக் காட்டுகின்றார். இவ்விதழ் சிற்சில மாற்றங்களைக் கொண்டுள்ளன. தலையங்கப் பகுதியில் வழக்கமான கந்தரலங்காரப் பாடலுடன் முருகர் மயிலுடன் விளங்கும் படம் இடம் பெறுகின்றது. பல விதச் செய்திகளை இடித்துக் காட்டி விளக்கும் 'இடி முழக்கம்' எனும் புதிய பகுதி அறிமுகமாகியுள்ளது. 'இடி முழக்கம்' எனும் இப்பகுதி பின்னர் 'ஊழியனி'லும் தொடர்ந்து வந்துள்ளது சுட்டத்தக்கது.

இரண்டாவது ஆண்டில் 13-ஆவது இதழ் முதல் 39-ஆவது இதழ் வரையிலும் இராய. சொக்கலிங்கம் ஆசிரியர் பொறுப்பேற்று செயலாற்றியிருக்கிறார். ஏதோ சில அரசு விதி முறைக் காரணங்களுக்காக இடையில் சில வாரங்கள் மீண்டும் முருகப்பச் செட்டியார் இதழ் பொறுப்பைக் கவனித்து வந்திருக்கிறார். 2ஆவது ஆண்டின் 45ஆவது வார இதழ் தொடங்கி மீண்டும் இராய. சொக்கலிங்கம் இதழாசிரியர் பொறுப்பை முழுமையாக மேற்கொள்ளத் தொடங்கியுள்ளார்.[5]

---

5. இந்திய விடுதலைக்கு முந்தைய இதழ்கள், இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு., (பதி.,) உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999, ப. 172.

## 'ஊழியன்' இதழாகப் பெயர்மாற்றம் பெறுதல்

இராய. சொக்கலிங்கத்தை ஆசிரியராகக் கொண்ட தனவைசிய ஊழியன், ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் 'ஊழியன்' எனப் பெயர் மாற்றம் கொண்டு வெளிவரத் தொடங்கியது. இதழின் பெயர் 'ஊழியன்' என மாறி, முழுப் பொறுப்பையும் இராய. சொக்கலிங்கம் ஏற்றபின் இதழின் கொள்கையும் விரிவடைந்தது. காந்திய அடிப்படையில் விடுதலைப் போரில் தொண்டு செய்யும் இதழாக இது வீறுநடை போட்டது.[6] இதழின் வடிவத்திலும் மாற்றம் ஏற்பட்டது. முழுத்தாள் அளவில் வந்து கொண்டிருந்த இதழ் 2-6-1925 முதல் டெம்மி அளவில் வெளிவந்துள்ளது.

## ஊழியனின் மூன்று காலகட்ட நிலை

1. காரைக்குடி, 2. சென்னை, 3. மீண்டும் காரைக்குடி என மூன்று காலகட்ட நிலைகளில் ஊழியன் இதழ் வெளிவந்துள்ளது.

**காரைக்குடியில் இருந்து வெளிவந்த ஊழியன்:** இவ் ஊழியனின் முகப்புப் பகுதியில் இடது பக்கத்தில் 'சென்னைப் பதிவு எண். 1509' என்றும், வலது பக்கத்தில் தந்தி விலாசம் 'Oolian' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதழின் மேல்பக்கத்தின் நடுவில், செவ்வாய்தோறும் திகழ்வது என்றும், ஆசிரியன் - இராய. சொக்கலிங்கன் என்றும் எழுதி அதன் கீழ் 'குடிதழீஇக் கோலோச்சும், நல்லாண்மையென்ப தொருவற்கு' என்னும் திருக்குறளும் தலையங்கப் பகுதியின் இலச்சினையாக இந்திய வரைபடத்துடன் உள்ள பாரதமாதா படமும், ஒவ்வொரு இதழிலும் 'மன்னர் தமக்கும் அஞ்சேன், மாண் பெரும் நாட்டிற்காக' என்னும் பாடல் இடம் பெற்றுள்ளது. முதலில் பன்னிரண்டு பக்கங்களுடன் வெளியான ஊழியன், 8-9-1925 முதல் பெரிய வடிவில் பதினாறு பக்கங்களைக் கொண்டு வெளிவந்துள்ளது. ஐந்தாவது ஆண்டில் எட்டு இதழ்கள் வெளிவந்ததையும், இதன்முன் 12 பக்கங்களோடு வந்த ஊழியன் இனி 16 பக்கங்களில் வெளிவரும் என்றும், எனினும் சந்தா உயர்த்தப்படவில்லை என்றும் ஆசிரியர் தலையங்கப் பகுதிகளில் எழுதி உள்ளார். அத்துடன் இவ்வாண்டின் 'ஊழியன்' சிறந்த கருத்துக்களடங்கிய பற்பல அரிய பொருள்களைத் தாங்கி வருவதோடு மக்கட்கு மகிழ்வூட்டக்கூடிய உயர்ந்த பல சித்திரங்களை வாரந்தவறாது காட்டி உவகையூட்டுவான். 'ஊழியன்' என்றும் போல் தனது நேர்மையையும், அஞ்சாமையையும் விடாதொழுகுவான்;. தன் பெருங்கடமையைத் தடுப்பது எதுவாயினும் கடமையிற் சிறிதும் வழுவ மாட்டான் எனவும் ஆசிரியர் இராய. சொக்கலிங்கம் தலையங்கப்

6. நகரத்தார் கலைக்களஞ்சியம், ப. 84.

பகுதியில் கூறுவதிலிருந்து, ஊழியன் மக்களுக்கு ஆற்றிய சிறந்த தொண்டினை அறிந்து கொள்ள முடிகிறது.

## சென்னையிலிருந்து

தொடக்கம் முதல் காரைக்குடியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த ஊழியன் இதழ் 1934ஆம் ஆண்டு சூலை முதல் வாரமுதல் சென்னையிலிருந்து வெளிவரத் தொடங்கியது. அதற்கு முன் 21-6-1933இல் பொருள் இழப்பினைக் காரணமாக அறிவித்து இராய. சொக்கலிங்கம் இதழினை நிறுத்தி விட்டிருந்தார். 8-9-1925இல் இதழ் தலையங்கத்தில் ஆசிரியரே 'ஊழியன் உடல் வளர்ச்சியும் பொருள் வளர்ச்சியும் மிகுதியும் பெற்றிருக்கிறான்' எனக் குறிப்பிட்டுள்ளார். பின் வந்த எட்டாண்டுகளில் பொருள் இழப்பு எக்காரணத்தினாலோ ஏற்பட்டிருக்கக் கூடும் எனத் தெரிகிறது. சென்னையிலிருந்து வெளிவந்த ஊழியன் A-4 அளவில், 46 பக்கங்களை உடையதாகவும், தேசிய சித்திர வாரப் பத்திரிகை எனும் குறிப்பைத் தாங்கியதாகவும் வெளிவந்தது. அதற்கேற்ப வண்ணப்படங்களைக் கொண்ட அட்டைப் படத்துடன் இதழ் வெளிவந்துள்ளது.

தலையங்கப் பகுதியின் இலச்சினையான பாரத அன்னையின் உருவத்திற்குக் கீழ், முன்னம் இடம்பெற்றிருந்த பாடல் சற்று மாற்றம் கொண்டு அமைந்தது.

இந்தியத் தாய் முடி சூடி எழிற் சிங்கா
    தனமேறி ஈடிலாது
சொந்த வர சே புரியத் துயர்போக்கி
    யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலை பிறப்பில்
    இழிவுயிர் வென் இயற்கை ஓங்க
நந்த லிலா ஊழியமே நான் கொண்டேன்
    நல்லன வெந் நாளும் வாழ்க

எனும் இப்பாடல் ஒவ்வொரு இதழிலும் வெளிவந்தது. இதழ் அட்டையில் இடப்பக்கம் 'The Oolian' எனும் பெயரும், வலப்பக்கம் 'Reg. No. M. 1509' என ஆங்கிலத்திலும் குறிக்கப்பட்டுள்ளது. அட்டையின் கீழ் இடப்பக்கம் 'தேம்ஸ் நதியின் சூரியாஸ்தமனம்' 'பாலித் தீவில் அம்புவிடும் போட்டியில் ஈடுபட்ட ஓர் மடமான்' பவேரியன் ஆல்ப்ஸ் மலை, 'பழம் விற்கும் காந்தெஷ்பில் ஜாதி மாதர்கள்' எனப் பலவிதமான வண்ணப்படங்கள் இடம் பெற்றுள்ளமை இதழின் தரத்திற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றன. இதழாசிரியர் இராய. சொ.வின் பரந்துபட்ட பார்வையினை

எடுத்துக்காட்டும் வண்ணம் இப்படங்கள் உள்ளன. படத்தின் அருகில் 'உள்ளுறை' என எழுதி அதன் கீழ் 'முக்கிய விஷயங்கள்' எனக் குறித்து இதழின் உள்ளே இடம் பெற்றுள்ள சிறப்பான கட்டுரை, கதைகள் இனங்காட்டப்பட்டுள்ளன. ஆனால் கட்டுரை இடம்பெற்றுள்ள பக்க எண் குறிப்பிடப்படவில்லை. 'இந்தியா டுடே' போன்ற தற்கால இதழ்கள் இது போன்று பின்பற்றுவது குறிப்பிடத்தக்கது. காரைக்குடியில் இருந்து வெளிவந்ததை விட சென்னையில் இருந்து வெளிவந்த இதழ் பல விதத்திலும் மேன்மை பெற்றிருந்ததாக இருப்பது சுட்டத்தக்கது.

## மீண்டும் காரைக்குடிக்கு மாற்றம்

சென்னையிலிருந்து வெளிவந்த இறுதி இதழ் 18-3-1938 என்று தெரிகிறது. இந்த இதழில் ஊழியன் ஊர்மாற்றம் என்ற தலைப்பிட்டு, இனிக் காரைக்குடியிலிருந்து வெளிவரும் எனக் குறிப்பிட்டு, ஆசிரியர் அறிவிப்பு ஒன்றினை வெளியிட்டுள்ளார். "சில காரணங்களால் 'ஊழியன்' காரியாலயமும் பத்திரிக்கை வெளியீடும் சென்னையினின்றும் காரைக்குடிக்கு மாற்றம் பெறுகின்றன. எத்துணை வாரங்கள் செல்லும் எனச் சொல்லுதற்கில்லை. அனேகமாக மூன்று அல்லது நான்கு வாரங்கள் வெளிவரக் கூடும். தாமதம் ஏற்படுவது இயந்திரம் முதலியன வந்து சேர வேண்டுமென்பதிலும், டிக்ளரேஷன் பெறுவதிலுமேயாகும். வெளிவந்ததும் சந்தாதாரர்க்குத் தொடர்ந்து அனுப்பப்பெறும். இடைக்காலத் தாமதம் பொறுத்துக் கொள்க! என ஆசிரியர் குறிப்பிடுவதினின்றும் 'இதழ்' காரைக்குடிக்கு மாற்றப்பட்டுள்ள விவரம் அறியமுடிகிறது. ஆனால் அதற்கான காரணத்தினை அறிய முடியவில்லை. இராய. சொக்கலிங்கம் 1938 முதல் 1941 வரை மூன்றாண்டுகள் காரைக்குடி நகரசபைத் தலைவராகப் பணியாற்றியுள்ளார். அவர் பணிக்காலத்தில்தான் இப்பொழுது காரைக்குடி அரசு மருத்துவமனை இயங்கிக் கொண்டிருக்கும் 'காந்தி மாளிகை' என்ற கவினுறு கட்டிடம் நகர சபைக் கட்டிடமாகக் கட்டப் பெற்றது எனும் செய்தி நகரத்தார் கலைக் களஞ்சியம் (ப. 213) வழி அறிய முடிகிறது. ஒருவேளை மேற்குறிப்பிட்ட அலுவல் காரணமாக இதழ்ப் பணியினையும் காரைக்குடிக்கே மாற்றிக் கொண்டிருக்கக் கூடும்.

## இதழின் விலையும் சந்தாவும்

இதழ் தொடங்கப் பெற்ற போது தனி இதழின் விலை 1½ அணா (9 காசுகள்). இது 2 அணாவாக (12 காசுகள்) உயர்த்தப்பட்டது.

2-9-1921இல் மீண்டும் விலை 1½ அணாவாகக் குறைக்கப்பெற்றது. ஏறிய விலை இறங்குவது என்பது இதழியல் வரலாற்றில் இந்த இதழில் மட்டுமே காணப்படுகிறது எனலாம். சென்னைக்குச் சென்றபோது மீண்டும் விலை 2 அணாவாக உயர்ந்தது. ஆனால் மறுபடியும் காரைக்குடிக்கு வந்தபோது வியக்கத்தகும் முறையில் விலை 1 அணாவாகக் குறைக்கப் பெற்றுள்ளது. குறைந்த விலையிலேயே அமைந்து இதழ் தொடர்ந்து பொருள் இழப்பிலே நடக்கவும், இறுதியில் நிறுத்தப்படவும் காரணமாயிருக்கலாம் என்ற ஐயம் தோன்றுகிறது. ஊழியன் இதழின் வாசகர்களும் சந்தாதாரர்களும் தமிழகத்தில் மட்டும் அல்லாது, மலேசியா, இரங்கூன், இலங்கை, பர்மா ஆகிய கடல்கடந்த நாடுகளிலும் இருந்தார்கள் என்பது இவ்விதழுக்குப் பெருமை சேர்க்கும் ஒன்றாகும். ஒவ்வோர் இதழிலும்,

ஊழியன் சந்தா

| | |
|---|---|
| உள்நாடு வருடச் சந்தா | 6 - 0 - 0 |
| உள்நாடு 6 மாதச் சந்தா | 3 - 0 - 0 |
| வெளிநாடு வருடச் சந்தா | 10 - 0 - 0 |
| வெளிநாடு 6 மாதச் சந்தா | 5 - 0 - 0 |

எனச் சந்தா விபரம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

### 'ஊழியன்' இதழின் உள்ளடக்கம்

'ஊழியன்' தனவைசிய ஊழியனாக இருந்த காலகட்டத்தில் 'சமூக' இதழாக இருந்தமையால் பெரும்பான்மையான சமூகச் செய்திகளை உள்ளடக்கிய இதழாக இருந்துள்ளது. சிறிதளவு சமுதாய, சமய, அரசியல், மகளிர் நலச் செய்திகளுக்கும் முக்கியத்துவம் அளித்து வந்துள்ளது. ஆனால், 'ஊழியன்' எனப் பெயர் மாற்றம் பெற்ற பின் சமுதாய நலனில் அக்கறை கொண்ட இதழாக உருவெடுத்தது. எனினும், முன் இடம்பெற்றதைப் போலச் சமூகச் செய்திகளுக்கும் இடம் அளித்து வந்துள்ளது. ஊழியன் இடையிடையே நிறுத்தப்பட்டுக் காரைக்குடி, சென்னை, மீண்டும் காரைக்குடி என இடம் மாற்றப்பட்டு வந்தாலும், தரத்தில் எந்தவித மாறுபாடும் கொள்ளவில்லை. பொதுவாக மூன்று காலகட்டத்திலும் ஊழியனில் இடம்பெற்ற செய்திகள் இங்கு ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன. காந்தி, நேரு, பாரதியார், ஈ.வெ.ரா. பெரியார் போன்ற தலைவர்களைக் குறித்த செய்திகள், நாட்டு விடுதலை, அறிவியல், மொழிபெயர்ப்பு, கலை, இலக்கியம், தொழில் முன்னேற்றம், டாக்டரின் டயரி (நகைச்சுவை துணுக்கு), விகடத்திரள், இடி முழக்கம், செய்தித் திரட்டு, ஊர்ச் செய்திகள், புத்தக மதிப்புரை, திரைவிமர்சனம், சினிமா உலகம், உலக

அரங்கம், கேலிச் சித்திரம்; கோணல் உலகம், காதற் கடிதங்கள், மேனாட்டு அரசியல் சக்கரம், உடல் நலம், நமது தபால் பெட்டி, வரலாறு, மகளிர், அயல்நாட்டுச் செய்திகள், தொடர்கதை, சிறுகதை, நாடகம் மற்றும் பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில் புகைவண்டி (ரயில்), கப்பல், விமானப் போக்குவரத்து, விமானத் தபால் நேரம், விலைவாசிகள் என அனைத்துத் தரப்பு மக்களும் பயனடையும் வகையில் ஏராளமான செய்திகளை உள்ளடக்கியதாக 'ஊழியன்' வெளிவந்தது மக்களிடையே அது பெற்றிருந்த செல்வாக்கைக் காட்டுவதாக உள்ளது. ஒரு சிறந்த இதழினை வெளியிடுவதில், இதழாசிரியருக்கு உள்ள திறமையினை எடுத்துக்காட்டுவதாக இப்பகுதிகள் அமைகின்றன. இத்துடன் 'விளம்பரப்பகுதி' மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தது. 34ஆம் ஆண்டிற்குப் பிறகு 'தேசிய சித்திர வாரப்பத்திரிகை' எனும் தலைப்புடன் ஊழியன் வெளிவந்த காலத்தில், ப-23 முதல் ப-26 வரை ஒவ்வொரு பக்கத்திலும் 2 புகைப்படங்கள் வீதம் 8 புகைப்படங்கள் இடம்பெறும் Photo பகுதியும் அமைந்திருந்தது.

### ஊழியனும் காந்தியடிகளும்

ஊழியனின் பெரும்பான்மையான இதழ்களில் காந்தியடிகள் குறித்த செய்திகள் இடம்பெற்றிருப்பது ஆசிரியருக்கு அவரிடம் உள்ள ஈடுபாட்டினை எடுத்துக்காட்டுவதாக அமைகிறது. 'ஹரிசன்' இதழ் மூலம் காந்தி எழுதும் கட்டுரைகளையும், செய்திகளையும் மொழியாக்கம் செய்து வெளியிடுவதுடன்; காங்கிரஸ் இயக்கத்துள் நிலவிய சுயராஜ்யக்கட்சி குறித்த காந்தியத்தைச் சார்ந்த தலைவர்களின் கருத்துகளையும் கட்டுரைகளாக வெளியிட்டுள்ளது. காங்கிரஸ் இயக்கத்தின் திட்டங்கள், தலைவர்களின் வேண்டுகோள்கள், கருத்து வெளிப்பாடுகள் ஆகியவற்றை மக்களிடம் முன்நிறுத்தியும், காந்தியடிகளின் புகைப்படம், கலந்து கொண்ட நிகழ்ச்சிகள் போன்றவற்றை வெளியிட்டும் வந்துள்ளது. 'நிஷ்களங்கமானவர் காந்தி?' என்னும் சார்லஸ் லாண்டு போர்டின் கருத்து, 'மகாத்மா அரசியல்வாதியல்ல' என்னும் தலைப்பில் சாதுவாஸ்வானியின் பேச்சு, தீண்டாமைக்கு எதிராக அடிகள் உண்ணாவிரதம் மேற்கொண்டுள்ளமை, காந்தியடிகள் 1934இல் காரைக்குடிக்கு வந்த போது இராய. சொக்கலிங்கம் வீட்டில் விருந்து உண்டதைக் குறித்து ஆசிரியர் எழுதி உள்ள கவிதை, காந்தியடிகளின் எளிய வாழ்க்கை குறித்து 'ஹரிஜன்' இதழில் வெளிவந்த கட்டுரையின் மொழியாக்கம், காந்தியின் மௌன விரத முடிவு எனக் காந்தியடிகளின் வாழ்க்கையிலும், விடுதலைப் போராட்ட நிலையிலும் நிகழ்ந்த

ஒவ்வொரு நிகழ்ச்சியினையும் 'ஊழியன்' பதிவு செய்துள்ளது. காந்தியடிகளைக் குறித்து ஆய்வு செய்வார்க்கு 'ஊழியன்' மிகச் சிறந்த தரவுகளை அளிக்கும் என்பதில் மாற்றமில்லை. சான்றாக,

'மத மாற்றக் கண்டனம்' குறித்த காந்தியின் கருத்து (ப. 14, 7-6-35) ஓரிதழில் வெளிவந்துள்ளது.

> கிறிஸ்தவ மதத்தில் பிற மதத்தினரைச் சேர்க்கும் பொருட்டு பாதிரிமார்கள் இந்தியாவுக்கு வருவதைக் காந்திஜி தடுப்பாரா என்ற கேள்வி கிறிஸ்தவ மிஷனைச் சேர்ந்த ஒருவரால் - காந்திஜியிடம் கேட்கப்பட்டது. காந்திஜி அதற்குப் பதிலளித்த போது என்னிடம் அதிகாரமும் சட்டமியற்றும் உரிமையுமிருக்குமாயின் மதமாற்றத்தை நிச்சயமாய்த் தடை செய்வேன்

எனப் பதில் அளித்துள்ளார். இது போன்று அரிய செய்திகள் 'ஊழியனில்' பதிவாகி உள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

## நேரு

காந்தியடிகளுக்கு அடுத்தபடியாகப் பண்டித நேருவின் தேசபக்திக்கும் 'ஊழியன்' பெருமதிப்பு அளித்து வந்துள்ளது. நேரு சிறை சென்றது, நேருவின் மனைவி நோய்வாய்ப்பட்டது, அவருக்குச் சஸ்திர சிகிச்சை (அறுவை சிகிச்சை) அளிக்கப்படுவது குறித்து, அவர் உடல்நிலை மோசமான நிலையிலும் இந்திய அரசாங்கம் நேருவை விடுதலை செய்யாதது குறித்து எனக் குறிப்பாக 1935இல் வெளிவந்துள்ள ஒவ்வொரு இதழிலும் 'நேருவைப்' பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. தீபப்பிரதிஷ்ணம் எனும் பகுதியில் 'நம் நேருவின் தேசபக்தி' எனும் தலைப்பில் நேரு தம் தந்தையார் நினைவாக, 'ஆனந்த பவனம்' எனும் தனதில்லத்தை மருத்துவச் சாலையாக அமைத்து நாற்பதினாயிரத்தை நன்கொடையாக அளித்தமை (12-4-1935), 'இராமாயணத்தின் உண்மை" என்னும் தலைப்பில் ஸ்ரீ ஜவஹர் இந்திரா நேருவுக்கு விட்ட கடிதம் (மொழிபெயர்ப்பு, ப-19, 26-4-35) ஆகிய செய்திகளையும் நேருவின் முழு உருவப்படம் (1-1-1937), இந்திராகாந்தியின் உருவப்படம் (9-7-1937) இரண்டையும் வெளியிட்டுள்ள ஊழியன் நம் அருமைச் சகோதரி இந்திரா நேருவின் தியாகத்தைப் பார்க்கத் தேசம் காத்திருக்கிறது எனும் செய்தியினையும் வெளியிட்டுள்ளது. இதழாசிரியரின் முன்னோக்குப் பார்வையினை எடுத்துக்காட்டும் வகையில் இச்செய்தி அமைந்திருப்பது சுட்டத்தக்கது.

### ஈ.வெ.ரா.

செட்டி நாட்டில் 'தோழர் ஈ.வெ. ராமசாமி' எனத் தலைப்பிட்டு அதன்கீழ் சுயமரியாதை, சமதர்ம இயக்கத் தலைவரான தோழர் ஈ.வெ. ராமசாமி, தோழர்கள் ராம. அழ. சிதம்பரம், ரெங்கம்மாள் போன்றோரின் சமூக முன்னேற்றப் பிரச்சாரம் செய்ய மேற்கொண்டுள்ள சுற்றுப் பிரயாணம் குறித்த நிகழ்ச்சி விவரங்கள் நாள், நேரத்துடன் வெளியிடப்பட்டுள்ளன. திருச்சியில் பெரியார் தலைமையில் நடந்த சிதம்பரம் - ரங்கம்மா ஆகியோர் செய்து கொண்ட மறுமணம் குறித்த காட்சிப் படங்களும் செய்திகளுடன் வெளியிடப்பட்டுள்ளன.[7] தோழர் ராமநாதன் சிறையில் இருந்து வெளிவருகிறார். தலைவர் ஈ.வெ.ரா. மீது அஸ்திரம் (ப. 27, 12-4-35) என ஈ.வெ.ரா. குறித்தும் அவ்வப்பொழுது செய்திகளை வெளியிட்டு, அவ்வியக்கத்தைச் சார்ந்தவர்களுக்கு 'ஊழியன்' சேவை புரிந்துள்ளமை சுட்டிக்காட்டத்தக்கது.

### அறிவியல் செய்திகள்

ஓரிதழ் அனைத்துத் துறை சார்ந்தவர்களையும் திருப்தி செய்வது கடினம். ஆனால் 'ஊழியன்' அறிவியல் அறிய விரும்புவார்க்கும் சிறந்த முறையில் பயன் நல்கியுள்ளது. ஒரு தேர்ந்த அறிவியல் இதழ் போல் கடினமான பல அறிவியல் கட்டுரைகளை, எளிமையான வடிவில் அளித்துள்ளமை போற்றத்தக்கது. ஸ்ரீமதி கமலம் எழுதிய மனிதத் தோற்றம் பூமியில் எவ்வாறு ஏற்பட்டது (ப. 15, 5-4-35) எனும் கட்டுரை பரிணாம வாதத்தின் விளக்கத்துடன் அமைந்துள்ளது மற்றும் கிரகங்களின் உண்மை, செவ்வாய் கிரகத்தில் மனிதருண்டா? உலகம் வியக்கும் உத்தமி மாடம் கூரி (3-5-35), உலகெலாம் .வெளி மயக்கே, டாக்டர் எச். ஸ்பென்சர் ஜோன்ஸ் 'சண்டே டெஸ்பாட்ச்' ஆங்கிலப் பத்திரிகையில் எழுதிய 'செவ்வாயில் மனித வாசம்' எனும் கட்டுரையின் மொழிபெயர்ப்பு, அழகு மிக்க கிரகம் சனியும் அஷ்டசந்திரர்களும் உடைந்து போன ஒன்பதாவது சந்திரன் (ப. 32, 28-6-35) எனப் பலப்பல சிறப்பான அறிவியல் கட்டுரைகள், விளக்கப்படத்துடன் இடம்பெற்றிருக்கின்றன.

### மொழிபெயர்ப்புக் கட்டுரைகள்

சிறந்த கருத்துகள் எங்கிருந்தாலும் தமிழ் மொழியில் மொழி பெயர்க்கப்பட வேண்டும் எனும் பாரதியாரின் கருத்திற்கேற்ப,

---

7. இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, ப-182.

அக்காலத்தே அயல்நாட்டு இதழ்களில் வெளிவந்த சிறப்பான கட்டுரைகள் பலவும், சிறந்த மொழி அறிஞர்களைக் கொண்டு, மொழிபெயர்ப்பு எனத் தெரியாத வகையில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளது பாராட்டத்தக்கதாகும். சான்றாக, 'ரெய்னால்ட்ஸ் இல்லஸ்ட்ரேடட் வீக்லி'யில் வெளிவந்த "ஐரோப்பிய யுத்தத்திற்கு பிரிட்டன் காரணம்" சர்வதேச கிராணிகல் பத்திரிகையில் வெளிவந்த C.M. ஈஷங் பெக்கர் எழுதிய அமெரிக்கா செய்ய வேண்டும் ஒரே காரியம், 'லா டிரிபியூன்டி நேஷன்ஸ்' எனும் பிரெஞ்சுப் பத்திரிகையில் வெளியான 'இந்தியாவில் பிரெஞ்சுப் பார்வை' எனப் பலவிதமான சிறந்த மொழிபெயர்ப்புக் கட்டுரைகள், கிட்டத்தட்ட ஒவ்வோர் இதழிலும் இடம் பெற்றிருக்கின்றன.

### கலை

கலைப் பகுதியினையும் விட்டு வைக்கவில்லை 'ஊழியன்'. 'இந்தியா விழையும் அருங்கலை' எனும் தலைப்பில் 'கதைகளி' (ப. 16, 12-4-35) குறித்த பல அரிய செய்திகளை விளக்கப்படத்துடன் வெளியிட்டுக் கலைத்துறையில் இருப்பவரையும் தன்னகத்தே ஈர்த்துள்ளது.

### இலக்கியம்

பிற துறைகளிலேயே சிறந்த கவனத்தைச் செலுத்தியுள்ள 'ஊழியன்' இலக்கியத்தை மட்டும் விட்டு விடுமா? தற்காலத்தில் கருத்தரங்குகளில் மட்டுமே நாம் கேட்கக் கூடிய சிறந்த ஆய்வுக் கட்டுரைகளை, அக்காலத்தில் தனது இதழிலேயே வெளியிட்டுச் சாதனை படைத்துள்ளது இவ்இதழ். இலக்கிய ஆர்வலர்கள் அன்று மிகுதியாக இருந்திருப்பர் என நினைக்கத் தோன்றும் வகையில் உள்ளது இதில் இடம் பெற்றுள்ள இலக்கியக் கட்டுரைகள். சான்றாக மயிலை. சீனி வேங்கடசாமியின் தேவாரத்தில் திருக்குறள், ஆகாரத்தை நன்கு மென்று உண்ணுதல் தொடர்பாக எழுதிய 'பிளெச்சரிசம்' (Fletcherism) எனும் கட்டுரை, நெய்க்குடத்தில் கைவிடுதல் (பழங்கால நம்பிக்கை முறை) ஆகிய கட்டுரைகளும் எஸ்.கே.எஸ். எழுதிய பாரதியாரும் காதலும் எனும் ஒப்பியல் இலக்கியக் கட்டுரை, ஆசிரியர் இராய. சொக்கலிங்கத்தின் 'காதல் சிறப்பு உரைத்தல்' (வள்ளுவரின் காமத்துப்பால் அதிகாரத்திலிருந்து) எனச் சிறப்பான இலக்கியக் கட்டுரைகள் இடம் பெற்றிருப்பதோடு, 'தில்லித் துருக்கர் செய்த வழக்கமடி – பெண்கள் திரையிட்டு முகமலர் மறைத்து வைத்தல்' எனும் பாரதியாரின் பாடலை அழகிய சித்திரக் காட்சியுடன் விளக்கி வெளியிட்டுள்ளமை போற்றத்தக்கதாகும். அத்துடன்

பாரதிதாசனின் 'கவிதைத் தொகுப்பினைப் பாராட்டி அவர்தம் கவிதைகளின் பெருமைதனைக் குறிப்பிடுவதோடு, பாரதிதாசனின் வாழ்க்கை வரலாற்று வளர்ச்சிப் போக்கினையும் வெகுவாகப் பாராட்டி மதிப்புரை எழுதியுள்ளமை ஆகியவை பிற்காலத்தே 'இலக்கியம் குறித்து அறிய வேண்டுவோர்க்குப் பயனளிக்கும் பொக்கிஷமாகத் திகழும் எனில் மிகையில்லை.

## வரலாற்றுக் கட்டுரைகள்

அயல்நாட்டு மந்திரி விட்வினாய் வரலாறு, அயர்லாந்து விடுதலைக்குப் போராடிய பெண் கான்ஸ்டன்ஸ் மார்க்கி விக்ஸ் வரலாறு, சொல்வழி நிற்கும் சுசீலன் எனும் தலைப்பில் 'அப்டன் சின்கிளேர்' எனும் அமெரிக்க ஆசிரியரின் வரலாறு, மாக்ஸிம் கார்கி, ருஷ்ய தீர்க்கதரிசி டால்ஸ்டாய், இந்திய சரித்திரக் கட்டுரை எனும் தலைப்பில் முகமுடி தளர்த்திய முஸ்லீம் அரசி, என அரிய பல வரலாற்றுக் கட்டுரைகள் இதழ்தோறும் அணி செய்து வந்துள்ளன.

## அயல்நாட்டுச் செய்திகள்

'உலகம் சுருங்கி விட்டது' எனத் தொழில் நுட்பம் முன்னேறியுள்ள இக்காலத்தே அனைவரும் பேசி வருகின்றனர். ஆனால் எந்தவொரு தொழில்நுட்ப வாய்ப்பும் இல்லாத அக்காலத்தே உலக அரங்கில் நடைபெறும் செய்திகளைச் சிறந்த ஆய்வுக் கண்ணோட்டத்துடன் அலசி நுணுகி ஆராய்ந்து வெளியிட்டுள்ளமை ஆசிரியருக்கிருந்த உலகளாவிய பார்வையினை எடுத்துக்காட்டுவதாக அமைகிறது.

சோவியத் சர்க்கார் ஆட்சி முறை என்னும் தலைப்பிலான கட்டுரை, ஸ்டாலின், ஜினாவில், காமனெவ் காலத்து நிலையினை ஆராய்கிறது.

மேனாட்டு அரசியல் சக்கரம் எனும் பகுதி முசோலினி, கமால் பாட்சா ஆகியோருடைய அரசியல் செயல்பாடுகளைச் சுட்டிக் காட்டுகின்றது.

ஜப்பானின் மூன்றாந் திட்டம் நிறைவேறுவது சாத்தியமா? வல்லரசுகட்கிடையில் ஜப்பானின் நிலைமை என்ன? வளர்ந்து செல்லும் ருஷ்யப் புதுப்பாடசாலைகள், ஜப்பான் வனிதையர் சகோதரப்பற்று, எகிப்திய அற்புதங்கள் ஆராய்ச்சி, புலரும் உலகம் எனும் பகுதியில் துணுக்குச் செய்திகளாகப் பல அயல்நாட்டுச் செய்திகள் என அக்காலத்திலேயே உலகத்தினைச் சுருக்கிக் காட்டும்

வண்ணம் இடம்பெற்றுள்ள கட்டுரைகள் 'ஊழியன்' இதழுக்குப் பெருமை சேர்ப்பவையாகும்.

### திரை உலகச் செய்திகள்

சுதன்ஸ்ராய் எழுதிய ஹாலிவுட் நடிகை ஜானெட் கெய்னர் கட்டுரையும், 'போட்டியில்லா பொற்பினள்' எனும் தலைப்பில் நியூயார்க் திரை உலகில் பெரும் பூரிப்புடன் பேசப்பட்ட நடிகை 'கிரேட்டா கார்போ' குறித்த கட்டுரையும் ஊழியன் இதழில் இடம்பெற்றுள்ளது. ஜி.வீ. சாமியின் 'சினிமா உலகம்' என்னும் கட்டுரை சினிமா எப்படி இருக்க வேண்டும் என்பதை விமர்சித்து எழுதுவதாக அமைகின்றது.

'சினிமா உலகம்' எனும் பகுதியில் சாமினாதன் எழுதிய திரையுலகத் திறனாய்வுக் கட்டுரைகள், **பக்த ராமதாஸ் – நளதமயந்தி ஒரு ஆராய்ச்சி** எனும் தலைப்பில் ஆய்வுக் கட்டுரை ஆகியவையும் இடம்பெற்றிருப்பது திரை உலகைக் கூட ஆய்வுக் கண்ணோட்டத்துடன் ஆசிரியர் அணுகியுள்ளார் என எடுத்துக்காட்டும் வண்ணம் உள்ளது.

இவை தவிர அக்காலத்தே வந்த திரைப்படங்களின் விமர்சனங்களும் நடுநிலைக் கண்ணோட்டத்தில் இடம் பெற்றுள்ளன.

### மகளிர் கட்டுரைகள்

தற்காலத்து மகளிர் இதழ்களில் வெளிவரும் கட்டுரை போன்று அக்காலத்தே சமூகத்தில் பெண்கள் நிலை பற்றிச் சுட்டிக்காட்டி, 'பெண் கல்வித் திட்டம்' குறித்த ஆராய்ச்சிக் கட்டுரை, கணவனை இழந்த நிலையில் வாடும் இளம் பெண்களின் அவலநிலையினைச் சுட்டிக்காட்டி இராய.சொக்கலிங்கம் எழுதியுள்ள கவிதையுடன் கூடிய கருத்துப்படம், பிள்ளைப் பேற்றின் பெருமை, **திபத்தில் பெண்கள் அந்தஸ்து** (ரின் - சென் - லாமோவின் கட்டுரை), பெண்ணடிமையின் கேடு குறித்த கவிதை, **போலிஸ் வேலையில் பெண்கள்** எனும் கட்டுரை, மங்கையர் உரிமைகள் - கவிதை, மாதர்கள் முன்னேறும் மாண்புறு நாடு எனும் தலைப்பில் மகளிர் முன்னேற்றக் கட்டுரை, **குமுதம்மாள், அங்குலியா பாய் எனும் A.பைலட் லைசன்ஸ் பயிற்சி பெற்ற பெண்களின் பேட்டி** என அமைந்துள்ள செய்திகள் மகளிர் முன்னேற்றத்திற்கான அனைத்து முயற்சிகளிலும் ஈடுபட்டுள்ள இதழ் ஊழியன் என்பதை உணர்த்தும் வண்ணம் உள்ளன.

## உடல் நலச் செய்திகள்

தமிழ் மூலிகையின் மாண்பு, இயற்கையின் சிறந்த உணவுகள், சூரிய ஸ்நானத்தின் மகாத்மியம், சில ஆரோக்கியக் குறிப்புகள், உடம்பு பொன்னிறமாக வேண்டுமா? வேப்ப மரத்தின் பயன் உள்ளிட்ட உடல் நலம் தொடர்பான செய்திகளும் 'ஊழியன்' இதழில் இடம்பெற்றுள்ளன.

இச்செய்திகள் தவிர 'வெகுநாள் ஆராய்ச்சியின் பயனாக மூன்று ரஷ்ய ரசாயன பரீஷர்கள் 'அக்ராஹின்' என்ற மலேரியா மருந்தைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இது கொய்னாவை விட 7 மடங்கு வீரியமுடையது' என்பது போன்ற துணுக்குச் செய்திகளின் திரட்டாக, செய்தித் திரட்டு; 'டாக்டரின் டயரி' எனும் பெயரில் மருத்துவர் குறித்த நகைச்சுவை; விகடத்திரள்; நகைச்சுவைத் துணுக்குகள்; உப்பு வரிக் குறைவு, போஸ்டல் ஆர்டர் விலையேற்றம், தீண்டாமையின் தீவிரம், இந்தியச் சட்டசபை முடிவு என அக்காலத்தில் நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளைத் துணிச்சலுடன் இடித்துக்காட்டிய இடிமுழக்கம்; நடேசன் என்பவரால் வேலையில்லாத் திண்டாட்டம் போன்று அக்காலத்தே நிலவிய நிகழ்வுகள் குறித்த கேலிச்சித்திரங்கள்; பகீரதன் என்பவரால் நாட்டு நடப்புகளைச் சுட்டிக்காட்டிக் கடித வடிவில் எழுதப்பட்டதாகிய 'நமது தபால் பெட்டி'; புதிய நூல்களை அறிமுகப்படுத்தி எழுதியுள்ள புத்தக மதிப்புரை; யுத்த நடவடிக்கைகளைச் சுட்டிக்காட்டும் 'விளக்கொளி' எனும் பகுதி; பொழுது போக்குப் பகுதியாகத் தொடர்கதை; சிறுகதை, நாடகம், நாடக விமர்சனக் கட்டுரைகள் எனப் பலபகுதிகளையும் உள்ளடக்கியதாக 'ஊழியன்' இதழ் திகழ்கிறது.

மதச்சார்பின்மையைக் காட்டும் வகையில் மகமது நபியின் சில அருண்மொழிகள், மகாவீரர் கருணையங்கடல் போன்ற கட்டுரைகளும் இடம் பெற்றிருப்பது 'ஊழியன்', இன, சமயத்தைக் கடந்து மக்களுக்குத் தொண்டாற்றினமையைப் புலப்படுத்தும் வண்ணம் உள்ளன.

## புகைப்படப் பகுதி

'ஊழியன்' இதழில் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியதும், சிறப்பான பகுதியுமாகத் திகழ்ந்தது புகைப்படப் பகுதி. தமிழ்நாடு, இந்திய அளவில் மட்டுமல்லாது, உலக அளவில் நடைபெற்ற சிறப்பான நிகழ்ச்சிகளையும், பிற நாடுகளில் உள்ள புகழ்பெற்ற கட்டடங்களின் புகைப்படங்களையும் மிகத் துல்லியமாக ஒவ்வொரு இதழிலும் ப-23 முதல் ப-26 வரை வெளியிட்டு வந்துள்ளது. சான்றாக

லண்டன் புனிதபால் ஆலயம், ஜெர்மனியின் விவசாய இயந்திரம், ஆங்கிலேயர் போடியம் கோட்டை, 14ஆவது நூற்றாண்டில் கட்டப்பட்டதாகிய வார்விக் அரண்மனை, புதுப்பேட்டை கன்னிகா பாடசாலையின் ஆண்டு விழாவின் போது மாறுவேடம் புனைந்து வந்த சில மாணவிகளின் புகைப்படங்கள் என அரிய புகைப்படங்களின் தொகுப்பு சிறந்த வரலாற்றுப் பதிவாகக் காட்சியளிக்கின்றது.

## அறிவிப்புகள்

பொதுமக்களுக்குப் பயன்படும் வகையில் சென்னை எழும்பூரில் இருந்து புறப்படும்/வந்து சேரும் ரயில்களின் விபரங்கள் 'ரயில் போக்குவரத்து' எனும் பகுதியிலும் 'கப்பல் புறப்பாடு நேர அட்டவணை' எனும் பகுதியில் சிங்கப்பூர், மலேயா, இரங்கூன், பர்மா முதலிய இடங்களுக்குச் செல்லும் கப்பல்கள் குறித்த தகவலும், அதே போல் அயல்நாடுகளுக்குக் கடிதங்களை எடுத்துச் செல்லும் விமானத் தபால் குறித்த தகவலும் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். ஒவ்வொரு இதழிலும் கடைசிப் பக்கம் (ப. 46) 'விலை வாசிகள்' எனும் பகுதி இடம் பெற்றுள்ளது. இப்பகுதி செட்டியார்களின் நடப்பு வட்டி சென்னை, இரங்கூன், பினாங்கு, சிங்கப்பூர் முதலிய இடங்களில் இவ்வளவு, வங்கிகளில் உள்ள வட்டி விகிதம் குறித்த தகவல், தங்கம், வெள்ளி விலை மொத்தமாக, சில்லறையாக இவ்வளவு போன்ற வணிகச் செய்திகள் இடம் பெற்றுள்ள பகுதியாகும். வாணிகத்தில் ஈடுபட்டுள்ள பலருக்கும் இப்பகுதி சிறந்த தகவல் பலகையாகச் செயல்பட்டிருக்கும் எனில் ஐயமில்லை.

## விளம்பரங்கள்

'ஊழியன்' இதழ் விளம்பரங்களுக்குச் சிறந்த இடத்தினை அளித்துள்ளது. இதழில் விளம்பரம் செய்வதற்கான கட்டணத்தொகை ஒவ்வொரு இதழிலும் குறிப்பிடப்படுகின்றது. பொது விளம்பரங்கள், நீதி மன்ற விளம்பரங்கள், ஒப்பந்த விளம்பர விகிதம் எனப் பிரித்து, அங்குலத்திற்கு ஒருவாரம் விளம்பரம் வெளியிட ஆகும் கட்டணம் என்ற அறிவிப்பை 'ஊழியன்' இதழ் வெளியிட்டுள்ளது. திரைப்படம் குறித்த விளம்பரம் அட்டைப் பக்கத்தின் பின்பக்கத்திலேயே அமைந்துள்ளது. தூக்குத்தூக்கி, ருக்மாங்கதா, நவீன தூக்குத்தூக்கி எனப் பல திரைப்படங்களின் விளம்பரம் முழுப்பக்க அளவில் விளம்பரப்படுத்தப்பட்டுள்ளது. அவை தவிர இமிடேஷன் தங்க

நகைகள், புகழ் பெற்ற ரஸ்டம் சுவர்க்கடிகாரம், சகுந்தலா கெமிக்கல் வைரங்கள், ரப்பர் ஸ்டாம்ப், பைண்டிங், சோதிடம், மருத்துவக் குறிப்பாக ஆயுர்வேத மருத்துவம், கருத்தடை மாத்திரைகள் போன்றவை பொதுவாக அதிக அளவில் இடம் பெற்றுள்ள விளம்பரங்களாகும். சோப் விளம்பரம் ஒன்று ‘பிரபுக்களாலும் ஜட்ஜ்களாலும் மருத்துவர்களாலும்’ புகழப்பட்ட எனும் அடைமொழியுடன் அமைந்துள்ளது. 1-3-35இதழில் ‘மாஸ்டர் குக்கிங் பவுடர்’ குறித்த விளம்பரம் ஒன்று வியப்பூட்டும் வகையில் உள்ளது. ரசம், சாம்பார், பச்சடி, புளியோதரை முதலிய செய்வதற்குக் கொதிக்கும் ஜலம் மட்டும்தான் தேவை என்கிறது அவ்விளம்பரம். ‘ரெடிமேட் மிக்ஸ்’ யுகமான தற்காலத்தில் மட்டுமின்றி, அக்காலத்திலேயே ‘ஆயத்த உணவு வகைகள்’ இருந்திருப்பது இவ்விளம்பரத்தின் வழி அறிய நேர்கிறது. பழநி பஞ்சாமிர்தம், விபூதி குறித்த விளம்பரமும் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஊழியன் இதழ் விளம்பரங்களுக்கு மிக இன்றியமையாத இடத்தினைக் கொடுத்துள்ளது என்பதை, ‘ஊழியனுக்குச் சந்தா சேர்க்கவும், விளம்பரங்கள் சேர்க்கவும் ஏஜண்டுகள் ஆங்காங்குத் தேவை. தக்க கமிஷன் கொடுக்கப்படும்’ என வெளியிட்டுள்ளதி லிருந்து அறிந்து கொள்ளலாம்.

## ஊழியன் சிறப்பிதழ்களும், தொகுப்பிதழ்களும்

ஊழியன் தன்னுடைய வழக்கமான இதழையே, ‘தமிழர் திருநாள் சிறப்பு இதழாக’ தைத்திங்கள் அன்று வெளியிட்டுள்ளது. இவ்விதழ் 120 பக்கங்களைக் கொண்டதாக உள்ளது. தேசவிடுதலை, இலக்கியம் உள்ளிட்ட செய்திகளை உள்ளடக்கியதாக உள்ளது.

ஊழியன் இதழ்களை ஆண்டு வாரியாகத் தொகுத்து ‘பைண்டு வால்யூம்’களாக வெளியிடுவதை ஒரு வழக்கமாக மேற்கொண்டு வந்துள்ளது. இந்த இதழ்கள் அலுவலகத்தில் கிடைக்கும் என்றும், குறைந்த அளவிலேயே ‘ஸ்டாக்’ உள்ளதென்றும் ஊழியன் இதழில் விளம்பரப்படுத்தப்பட்டுள்ளது. வாசகர்கள் இதனை ஆர்வத்துடன் வாங்கின நிலை இவ்விளம்பரங்கள் வழி அறிய நேர்கிறது. ஊழியன் இதழின் நிலைபெற்ற தன்மைக்கு எடுத்துக்காட்டாக இது அமைகிறது. இதழின் வணிக மேம்பாட்டிற்கு விளம்பரம், தொகுப்பு நூல்கள்

இரண்டும் பயனளித்திருக்கக்கூடும்.

### ஊழியன் துணை ஆசிரியர்கள்

பிற்காலத்தில் தமிழ் இதழ் உலகில் முன்னணி வகித்த பலர் 'ஊழியன்' இதழில் பணியாற்றியுள்ளதைச் செட்டி நாட்டுக் கலைக்களஞ்சியம் (ப. 84), சுட்டிக்காட்டுகின்றது. வரா., தி.ஜர., பி.ஸ்ரீ, புதுமைப்பித்தன், கொத்தமங்கலம் சுப்பு ஆகியோர் அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இத்தகையோரின் பணி ஊழியனுக்கு மேலும் பெருமை சேர்ப்பதாக அமைகிறது.

### ஊழியன் விளம்பர முகவர்

ஊழியன் தம் இதழுக்கான விளம்பர ஏஜெண்டுகளை - முகவர்களை ஊர்தோறும் கொண்டிருந்தது. அவ்வகையில் சென்னை விளம்பர முகவராகப் பணியாற்றியவர் ஜெமினி திரு. எஸ்.எஸ். வாசன் என்பது அறியலாகும்.

### தொகுப்புரை

1. ஊழியன் இதழ் 1917இல் காரைக்குடியில் தொடங்கப்பட்டு 1940 வரை வெளிவந்த சிறப்பான இதழாகும்.
2. முதலில் 'தனவைசிய ஊழியன்' என்ற பெயரில் வெளிவந்த இதழ் பின்னர் இராய. சொ.வை இதழாசிரியராகக் கொண்டபின் 'ஊழியன்' எனப் பெயர் மாற்றம் பெற்றது.
3. முதலில் காரைக்குடி, பின்னர் சென்னை, மீண்டும் காரைக்குடி என இதழ் இடம் மாற்றப்பட்டு வெளியானாலும் தரத்தில் எந்தவித மாறுபாடுகளையும் கொள்ளவில்லை.
4. 1930-ஆம் ஆண்டில் தமிழறிஞர்களால் 'நல்ல தமிழுக்கு நவசக்தியும் ஊழியனும்' எனப் போற்றப்பட்ட பெருமை கொண்டது இவ் இதழ் என்பார் சோமலெ.
5. இர்வின் பிரபு கொண்டு வந்த அவசர அச்சுச் சட்டம் காரணமாக ஒரு முறையும் (1930-இல் 3 மாதங்கள்), ஆசிரியர் இராய.சொ. விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றதால் ஒரு முறையும் (1932-இல் 10 மாதங்கள்),

பொருள்இழப்புக் காரணமாக ஒரு முறையும் (1933 முதல் சில ஆண்டுகள்) இடையிடையே நின்று வெளிவந்த இதழ் 18-7-1940இல் இறுதியாக நின்று போயிற்று. ஆனால் ஒவ்வொரு முறை இதழ் நிறுத்தப்பட்ட போதும், இன்ன காரணத்துக்காக இதழ் நிறுத்தப்படுகிறது என முறையாக அறிவிப்பை வெளியிட்டு நிறுத்தி வரலாறு படைத்த இதழ் இதுவாகும்.

6. நகரத்தார் பலரை எழுத்துத் துறையில் ஈடுபடச் செய்த பெருமையும், பிறமொழி இதழ்க் கட்டுரைகள், பிறமொழி இலக்கியங்கள் ஆகியவற்றை மொழிபெயர்த்து வெளியிட்ட சிறப்பும் இதழுக்கு உரியது.

7. இதழ் துறைக்கே உரிய பொருளாதார நெருக்கடிக்கு ஆட்படாமல், அதிக எண்ணிக்கையிலான சந்தாதாரர் களையும், விளம்பரதாரர்களையும் கொண்டு சிறப்புடன் நடத்தப்பட்ட இதழ் ஊழியனாகும்.

8. பொழுதுபோக்கு இதழாக இல்லாமல், அறிவு பூர்வமாகவும் விடுதலை உணர்வை ஊட்டும் வண்ணமும், பல்துறை சார்ந்த மக்களையும், ஆடவர், மகளிர், இளைஞர், சிறுவர் எனப் பலதரப்பட்ட வயதினரையும் கவரும் வகையில் ஊழியன் இதழ் அமைந்திருந்தது.

9. இவை எல்லாவற்றையும் விட அச்சுப்பிழை சிறிதும் இன்றி, சிறந்த வடிவமும், எளிய மொழி நடையும் கொண்டு வந்த இதழாக ஊழியன் அமைந்திருந்ததன் பெருமை இவ் இதழின் இதழாசிரியர் இராய. சொக்கலிங்கத்தையே சாரும்.

10. இதழாசிரியர் இராய. சொ. பல்துறைப் புலமையும், உலகளாவிய பரந்துபட்ட பார்வையும் கொண்ட முன்னோக்குச் சிந்தனையாளர் என்பதைப் புலப்படுத்தும் வண்ணம் 'ஊழியன்' இதழ் அமைந்துள்ளது.

## முதன்மை ஆதாரங்கள்

1. தனவைசிய ஊழியன் இதழ்கள்
2. ஊழியன் இதழ்கள்

## துணை நூல்கள்

1. இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், (பதி.) இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1999.
2. செட்டிநாடும் செந்தமிழும், சோமலெ, வானதி பதிப்பகம், சென்னை, 1999.
3. தமிழ் எழுத்தாளர் யார் - எவர்? 1966 எழுத்தாளர் சங்கம், சென்னை தொகுத்து வெளியிட்டது, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1966.
4. நகரத்தார் கலைக் களஞ்சியம், (பதி) ச. மெய்யப்பன், இஆ.கரு. முத்தையா, சபா. அருணாசலம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1998.

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113**

**அண்மை வெளியீடுகள்**

| | |
|---|---|
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - தொகுதி 3 | 60.00 |
| தமிழில் பிற துறைக் கோட்பாட்டாய்வுகள் | 25.00 |
| வ.உ.சி. ஒரு பன்முகப் பார்வை | 25.00 |
| இலக்கண நூல்களில் கருத்து வளர்ச்சி | 35.00 |
| தெ.பொ.மீனாட்சிசுந்தரனாரின்தமிழ்த்தொண்டும்மொழியியல்பங்களிப்பும் | 25.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தொல்லியல் நோக்கில் சங்ககாலம் | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி.500 வரை) | 45.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி.501 - கி.பி.900) | 70.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| அருந்தமிழ் நூற்காவலர் அடிகளார் | 55.00 |
| சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணியமுதலியார் | 40.00 |
| மூதறிஞர் மு. இராகவையங்கார் | 40.00 |
| ம.பொ.சி. யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியம் பண்பாடு | 30.00 |
| தணிகைமணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளை | 50.00 |
| அருந்தமிழ் அறிஞர் அ.ச.ஞா | 50.00 |
| ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் | 45.00 |
| விவிலியத் தமிழ் | 40.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி-3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல்கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ. நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்க பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |

Pub.No. 531 **தமிழ் கடல் இராய. சொக்கலிங்கம் 30.00**